உ

சிவமயம்.

பதினெண் சித்தர்களிலொருவராகிய

புலஸ்திய மகா முனிவரவர்கள்

அருளிச்செய்த

# வாத சூத்திரம்-300



இஃது

சிங்காரமுதலியார் அவர்களால்

பல ஏட்டுபிரதிகளைக்கொண்டு

எழுதப்பட்டு.

---


சென்னை,

இட்டா - பார்த்தசாரதி நாயுடு சன்ஸ்,

சக்கரவர்த்தி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

இதன் விலை] 1936. [அணா 12.

உ

கடவுள் துணை.



# புலஸ்தியமகாரிஷி யருளிச்செய்த

# வாதசூத்திரம் - 300.



ஆதியந்தம்நிறைந்ததொரு சோதிபாதம்
அன்பானரிஷிகளுட பாதம்போற்றி
நீதியாயெனையாண்ட வகத்தீசர்பாதம்
நினைந்துருகிப்போற்றிசெய்து நேர்மையாகச்
சோதியெனுமம்பிகைப்பெண் பாதம்போற்றி
தொல்லுலகில்ரசவாதம் நிலைக்கவேண்டி
பாதிமதிசடையணிந்தோர் பாதம்போற்றி
பகருகிறேன்சூஸ்திரமுந் நூறுந்தானே. (1)

தானென்றகும்பியெழு நூறுஞ்சொன்னேன்
தாஷ்டிகமாயந்நூற்றில் பாகஞ்சொன்னேன்
வானென்றயதைக்குறிக்கி முந்நூறாக
வகையாகக்கைபாகம் வரிசையாக
நானென்றவுலகத்தோர் வாதஞ்செய்து
நலமாகப்பிழைக்கும்வகை நன்மையாக
கோனென்றகுருவருளால் வாதக்காட்டைக்
கொள்ளையிடச்சொல்லுகிறேன் கொள்ளைதானே (2)

கொள்ளையாம்லிங்கபற்பம் மயத்தின்செம்பு
குணமானமெழுகோடு தைலப்போக்கு
சள்ளையிதிலில்லாமல் வீரப்பொக்கு
சரியானகட்டுவகை செந்தூரங்கள்
வள்ளலார் கைபாகம் வரிசையாக
வடிவானசூதபற்பங் கற்பூரங்கள்
வுள்ளபடிசொல்லுகிறேன் உலகந்தன்னில்
வோகோகோயிந்தநூ லுறுதிபாரே. (3)

# புலஸ்தியர் வர்தசூத்திரம் - 300.

## லிங்காசபற்பம்.

நுதியாய்முன்னேதான் லிங்கபற்பம்
உகந்துநீவைத்திடுவா யுலகத்தோர்க்கு
குதியாய்ப்பலபிணிகள் தீர்த்துவிட்டு
ஆண்மையாஞ்சீவனத்தைப் பண்ணிக்கொண்டு
குருவெபறாசவாதம் யோகமாக்கம்
படியானஞானமொடு வழலைபாகம்
குதியாயிடைபாகம் கைபாகந்தான்
நலமாகச்சொல்லுகிறேன் நடத்தைப்பாரே. (4)

டத்தைபார்சண்டறச பற்பங்கேளு
நலமாகயடிதளத்தில் நிற்கும்பாகங்
டத்திலெட்டுயெரிக்கிறதோர் பாகமாகும்
கீர்த்தியாய்ப்பலபிணிகள் தீரும்பாகம்
மடபதிகள்மறைத்ததோர் பாகமெல்லாம்
மயங்காமல்பசளைக்குந் தோணும்பாகம்
இடத்துடனேபுவியிலுள்ளோர் பிழைக்கச்சொன்னேன் (5)
திரமாகவைத்தியர்க்கு ஆணியாமே.

ஆணியாம்லிங்கமது சேர்தானென்று
அடைவாகக்கல்வத்தில் பொடியாய்ப்பண்ணி
காணியாங்கொடிவேலி ரெண்டுசேரு
காரணமாயிடித்துநீ தெள்ளிக்கொண்டு
வாணியாம்பொடியாக்கி லிங்கத்திட்டு
வடிவாகரெண்டுமொன்று யரைத்துத்தூளாய்
நாணியாய்க்கடத்திலிட்டு மேலேமூடி
நலமாகச்சீலைமண் வலுவாய்ச்செய்யே. (6)

செய்துநீவாலையென்ற யடுப்பிலிட்டு
செயமாகநால்சாமம் மெரித்துவாங்கு
நய்துமேதீயாற்றி யெடுத்துப்பாரு
நலமாகவாலைரசம் மேலேநிற்கும்
பய்துமேவழித்ததனை யெடுத்துக்கொண்டு
பதிவாகத்துணிதனிலே விட்டுக்கேளு
கய்துமேபிழிந்திட்டுக் கலவந்தன்னில் (7)
கலங்காமலிட்டுநீ நாட்டக்கேளீள.

## புகைநீர்.

நாட்டமாய்புகைநீரு வொன்றுகேளு
நலமாகவெடியுப்பு அஞ்சாங்காச்சல்
வாட்டமாய்பலம்பத்து நிறுத்திக்கொண்டு
வடிவாகச்சீனமது யிருபத்திஞலுக்
கூட்டமாய்ரெண்டுமொன்று யிடித்துக்கொண்டு
குணமானவாலையென்ற சட்டியிட்டு
மூட்டவேவாலைதனை மூடிமைந்தா
முனிவாகச்சிலைமண் செய்திடாயே. (8)

சீலையென்றமண்ணதுவே செய்தபின்பு
சிறப்பாகவடுப்பேற்றித் தீயைமூட்டி
வாலையென்றதீநீரு முந்நேவெள்ளை
வடிவானவெள்ளைதனை வீசிப்போடு
காலையென்றபுகைமஞ்சள் நீருமாகும்
கனிவானமஞ்சள்நீர் தன்னைவாங்கு
வாலையென்றசூதத்தைக் கல்வத்திட்டு
வடிவானபுகைநீரை விட்டுக்கேளே. (9)

விட்டுமேசூரியனில் வைத்தபின்பு
விதமாகக்காளான்போல் பூர்த்துநிற்கும்
வட்டுமேபூர்த்ததெல்லா மெடுத்துக்கொண்டு
வடிவாகப்புகைநீரை விட்டுவாநீ
கட்டுமேபின்பொருக்கால் பூத்துநிர்க்கும்
கனிவாகபூத்ததெல்லாங் காயவைத்து
நட்டுநீசீனமது சேருவாங்கு
நலமானவண்டோடுஞ் சேருதானே.

## அண்டச்சுன்னம்.

தானுனவண்டோடு சுத்திக்கேளு
தனியானஉவர்மண்ணுஞ் சுன்னம்நேரே
வானுகயோடுதனி விட்டுக்கேளு
வரிசையாய்க்குமூரயெரிக் கழிவிப்போடு
கானுனசுத்திசெய்த வண்டவோடு
உலாய்சேரொன்று சீனுகாரம்
தானுனசேரொன்று கலுவத்திட்டு
தன்மையாரெண்டுமொன்று யரைத்திடாயே. (11)

அரைத்திடவேபழச்சாற்றால் சாமம்நாலு
அதைக்காயவைத்துநீ பின்புகேளு
பரைத்திடவேவெண்கருவால் நாலுசாமம்
பதிவாகக்காயவைத்து வில்லைதன்னை
மரைத்திடவேபெரியபுட மிட்டுத்தீரு
மயமாகச்சீனமது பொங்காதப்பா
குரைத்திடவேசுன்னமது வாகும்பாரு
குணமானகைபாகம் வரிசைதானே. (12)

தானென்றகடுஞ்சுன்னஞ் சீனச்சுன்னந்
தாஷ்டிகமாய்ச்சகலதுரை யிதுக்குள்ளாச்சு
வானென்றமுன்னேதான் பூத்துநின்ற
வாலைரசந்தானெடுத்துப் பூத்தப்பூவை
நானென்றசேரொன்று நிறுத்துக்கொண்டு
நலமானசீனமது சுன்னம்நேராய்
கோனென்றதானெடுத்து ரெண்டுமொன்றாய்க்
குணமாகக்கல்வத்தி லிட்டுக்கேளே. (13)

இட்டுமேபுகைநீரால் ஜாமமாட்டு
இதமாகவில்லைதட்டி ரவியில்போடு
பட்டுமேகாய்ந்தபின்பு பகரக்கேளு
பதிவாகக்கடத்திலிட்டு மேலேமூடி
கட்டுமேமண்சீலை வலுக்கச்செய்து
நாடாததீயெரிப்பாய் நாலுசாமம்
கட்டுமேயிருந்திடுங்காண் யடியிலேதான்
கனிவாகவாலையென்ற சூதந்தானே. (14)

தானென்றசூதமது வுயரயேறாத்
தாஷ்டிகமாயிருந்துவிடும் மடியிலேதான்
கோனென்றகுருவருளாம் பதத்தைப்போற்றி
குணமானசாதிலிங்கஞ் சுன்னமாச்சு
வானென்றயென்குருதா னகத்தியர்தானும்
வடிவாகச்சொல்லவில்லை வாலைச்சொன்னாள்
நானென்றஆணைவத்தால் வெளியிற்சொன்னேன்
நலமாகயிக்குருவை நயந்துக்காணே. (15)

## லிங்கரசபற்பத்திற்குத் தீரும்வியாதி.

காணவேசாதிவெல்லந் தன்னிலேதான்
கால்களஞ்சியிட்டுநீயந்தி சந்திகொண்டால்
தோணவேநாளாறு வுண்டபோது
துடியானபத்தியங்க ளில்லையப்பா
மாளவேதீருகிற நோய்கள்தன்னை
மடைவாகச்சொல்லுகிறே னுற்றுக்கேளு
ஆணவேபேதியோடு சோகைமாலை
அடவாகச்சூசிகாவாய் வும்போகும். (16)

போகுமேமாலையோடு சோகைதீரும்
பொல்லாதயீளையொடு யிருவல்தீரும்
ஆகுமேமூலமொடு கிருணிப்போகும்
அடங்காதவாதமொடு பித்தம்போகும்
பாகுபெறவலிகுன்மம் பித்தகுன்மம்
பாங்காகமேந்தமாங் குன்மம்போகும்
வாகுபெறசிலேற்பனங்க ளெல்லாம்போகும்
வடிவானகாயமது கல்தூணாமே. (17)

நாமென்றமகோதரங்க ளெல்லாம்போகும்
நடுங்குமேகாமாலை பித்தப்பாண்டும்
தாமென்றகருமேகங் குஷ்டமெல்லாம்
தன்மையாம்தெருவயறு யிரைப்புநீங்கும்
வாமென்றதலைவலியும் மண்டைக்குத்தும்
வடிவாகச்சொன்னநோ யனைத்தும்போகும்
கோனென்றகுருவருளால் சொல்லிவிட்டேன்
குணமாகுங்கைமுறையாய்க் கூர்ந்துப்பாரே (18)

## லிங்கரசபற்பவேதை

கூர்ந்துபார்முன்னைதான் பண்டிதத்மைக்
குணமாகப்பார்த்துநீ பின்னேதானும்
வார்ந்துமேவாதமது செய்துத்தீரு
வடிவாகயிக்குருவைக் குடுக்கும்பாகம்
நாய்ந்துபார்கும்மிதனில் தைலச்செம்பு
நலமாகச்சொல்லிவிட்டேன் செம்புதன்னை
பாய்ந்துமேயெடுத்துநீ வுரிக்கிக்கொண்டு
பலமானவாலைகுரு வொன்றுதாககே (19)

தாக்கிடவேமாத்தென்ன பத்துமாகுந்
  தாஷ்டிகமாயுப்புக்குங் காவிக்கப்பா
வாக்கிடவேயோடாது வொளித்திடாது
  வடிவாகயிழைக்கொண்டு ஜீவனத்தைப்பண்ணு
பாக்கியமாய்ச்செய்துநீ யோகம்பாரும்
  பதிவாகக்காயசித்திப் பண்ணித்தேறத்
தூக்கிடவேசொன்னசொல்லுத் தப்பாதப்பா
  துடியாகச்சகலசித்துஞ் சித்தியாமே. (20)

சித்தியாம்வாலைரசம் வைத்துநீயுஞ்
  சிறப்பாகவேவாடாமல் சுன்னமாக்கி
கத்தியாங்குளிகைதனைக் கட்டுக்கொண்டு
  காரியமாய்ஞானவழி யடுத்துக்கூடு
புத்தியாய்சாஸ்திரத்தைக் கூர்ந்துபாரு
  பொருளானசகலசித்தும் மாடலாகும்
பத்தியேயினைவுதான் வைத்துப்பாரு
  பதிந்துமனைஞ்சாஸ்திரத்தின் பண்புப்பாரே. (21)

பண்பாகவைத்தியர்க்கு யிதுவேயாதி
  பகலிரவாய்க்கைபாகம் மறியவேணும்
உண்பாரைப்பார்த்துநீ திரியவேண்டாம்
  உத்துமேசாஸ்திரத்தை நம்பிப்பாரு
கண்பார்வையாகவே சூதந்தன்னைக்
  கனிவாகக்கட்டியே சுன்னம்வைத்து
நண்பாகவுண்டுவா வியாதிப்போகும்
  நலமாகப்பின்பெல்லாம் நயந்துப்பாரே. (22)

## வாலைரசமெழுகு

பாருநீவாலைரச மெழுகுதன்னைப்
  பண்பாகச்சொல்லுகிறேன் பரிந்துக்கேளு
காருநீவாலைரசம் பலமும்ரெண்டு
  கனிவாகநிறுத்துமே வைத்துக்கொண்டு
சாருமேவேப்பிலைதான் சேருநூறு
  சாக்ஷியாய்க்குறுக்கவே நறுக்கிக்கொண்டு
வாருமேபெரும்பாண்டத் துள்ளேயிட்டு
  வடிவாகநல்லதண்ணீர் நிறையவாறே. (23)

வார்த்துநீயடுப்பேத்தி யெரிநேர்பாகம்
வடிவாகயிலைசுவா யெறித்துக்கொண்டு
சாத்துநீபோகாதே சொல்லக்கேளு
சரியானகம்பிளியில் பிழிந்துக்கொண்டுக்
காத்துநீகிட்டிகெட்டி பிழிந்துக்கொண்டு
கனிவாகயடிகனத்த சட்டி நன்னில்
பார்த்துமேவிட்டுநீ யடுப்பிலிட்டுப்
பதிவாகவாலையென்ற சூதம்விட்டே. (24)

விட்டுநீபொங்காமல் பதமாகத்தான்
விதமாகயெரித்திடக் குழம்புபோலே
நட்டுமேயெரித்திட்டு வழித்துக்கொள்ளு
நலமாகக்கல்வத்தி லிட்டுதானும்
மட்டுமேயிருசாமம் நன்றுயாட்டி
மயமாகவாலாசம் மெழுகாய்நிற்கும்
கட்டுமெழுகெடுத்துப் பலமும்பத்து
கனிவாகவாளமது வொன்றுதானே. (25)

வொன்றுகுஞ்சத்திசெய்து கூடச்சேர்த்து
வுறவானபெருங்காயம் பலமுஞ்சேர்த்துக்
கன்றுகச்சிவதைவேர் பலமுமொன்று
நலமாகசக்கொன்று மிளகுமொன்று
வன்றுகயிவையெல்லாம் நிறுத்துக்கொண்டு
வன்பாகரசமெழுகோ டொக்கச்சேர்த்து
நன்றுகயரைத்திடுவாய் சாமம்நாலு
நலமாகயரைத்துநீ வழித்திடாயே. (26)

யரைத்துடனேவழித்ததைச் சிமிழில்வைத்து
யடவாகவயிரவர்க்குப் பூசைபண்ணி
பரைத்துடனேபரைதனக்கும் பூசைசெய்து
பதிவாகமெழுகெடுத்துப் பணந்தான்வீதங்
கரைத்துமேகொடுக்கின்ற வரிசைக்கேளுக்
கருவாகக்குன்றுமணிப் பிரமாணந்தான்
திரைத்துநீகொடுத்திடவே தேனில்தானும்
துரையாகத்தீருகிற ரோகைக்கேளே. (27)

## வாலைரசரமெழுகால் தீரும்வியாதி.

திருகிறநோவென்ன சொல்லக்கேளுத்
திரமாகக்குன்மமுதல் வாதரோகம்
பேருலகில்பித்தமெல்லா மோடிப்போகும்
பேதமறும்ரசமெழுகைக் கண்டாயானால்
காருகிறகடல்போலே நோய்கவந்துங்
கருதினால்ரசமெழுகை யுண்டபோதே
ஆருமேயறியாதே யோடிப்போகும்
அண்டபகிரண்டமெல்லா மாடலாமே. (28)

பாடுமேவாலைரச மெழுகைக்கண்டால்
யாடலாமொருகோடி வியாதிப்போகும்
கூடுமேகூட்டறிந்தால் சித்தியாச்சுக்
குணமாகவறியாட்டால் குணமொன்றில்லை
தேடுமேதேட்டெல்லாம் ரசத்தினாலே
திடமானபற்பமெல்லாம் பாகத்தாலே
பாடுமேபாட்டெல்லாம் மார்க்கத்தாலே
பரிகாரம்பண்டிதத்தைப் பணிந்துப்பாரே. (29)

பணிந்துபார்பெரியோர்கள் நூலைத்தானும்
பண்பாகமனம்பூண்டு பழக்கம்பண்ணு
வணிந்துபார்முன்னூற்றை யறிந்துபாரு
வாகாகபண்டிதந்தா நிலைத்துப்போகுந்
தணிந்துபார்சண்டாளர்க் கெய்தாவாறு
தாஷ்டிகவான்கோடியிலே யொருவனுண்டு
பிணிந்துமேபிணியறிந்து மருந்தையீய்ந்தால்
பொல்லாதபிணிகளெல்லாந் தீர்ந்துப்போமே. (30)

தீர்ந்துப்போம்வாலைரச மெழுகைவைத்துப்
பேசாதேயுண்டிடவே ரோகமெல்லாங்
கரைந்துமேகடல்புக்கும் வினைகளெல்லாங்
காதலாய்வீற்றிருக்குங் கருதிப்பாரு
பார்த்துமேபுளியுப்பைத் தள்ளிப்போடு
பகலிரவாய்ப்பலபிணிக ளோடிப்போகும்
நார்ந்துமேநோயெல்லாந் தவுடுபொடியாகும்
நாதாக்கள்சொல்மொழியை நாட்டம்பாரே. (31)

பாருமேநூலைவிட்டுப் பண்டிதத்தைப்
பார்த்தலைவார்பலனறியா மடையரப்பா
காருமேகைபாகந் தன்னைவிட்டு
காதலாய்ப்பார்த்தவர்க்கு நரகமெய்தும்
யேருமேவுழுதார்க்கால் பலனுமாகும்
யிதமாகப்பண்டிதத்தைப் பாராமூடர்
வேருமேயடிதொடுத்து யேறலாகும்
வீணாகபார்த்தாக்கா லில்லைகாணே, 32

காணவேசூதத்தை விட்டோர்கெட்டார்
காதலாய்த்திரிந்தோர்கள் உடல்கள்கெட்டார்
பூணவேபண்டிதங்கள் புடபாகங்கள்
போக்கோடேசெய்யாதார் மருந்துங்கெட்டு
ஆணவேசெத்தாலே வுயிர்கள்போச்சு
ஆகாகாயிச்சையினால் மனதுபோச்சு
நாணவேமனங்குண்ணி யேங்கியேங்கி
நாடுதனிலலைவார்கள் வாதிதானே. 33

வாதிமகன்வைத்தியனும் வடிவுமாகும்
வகையரியான்பண்டிதங்கள் செய்யமாட்டான்
சாதியினால்பேசியே சுணங்கன்தானும்
தற்கமதுபேசியே தெரிந்தாப்போலே
வேதியனார்போலவேயுரவுபேசி
வேதாந்தசாஸ்திரத்தை மெத்தப்பேசி
கோதியேகிளிப்பிள்ளை போலேபேசிக்
குணமாகவலைந்திடுவர் கோடிதானே. 34

## உப்புக்கட்டு.

கோடியிலேயலையாம லுப்பைக்கட்டி
குணமாகச்சொல்லுகிறேன் முந்நூர்தன்னில்
நாடியேகைபாகம் உப்புமார்க்கம்
நலமாகக்கட்டுகிற மார்க்கங்கேளு
சாடியேகல்லுப்புப் படிதானெட்டுச்
சார்வாகக்கடல்தண்ணீர் முப்பத்திரண்டு

செந்தூரஞ்செவ்வலறிப் போலேயாகுந்
நலமாகப்பச்சைநரம் பிருக்கும்பாரு
வந்தூரும்விந்தூறும் வடிவாம்மெத்த
வகையாகவெல்லாமுஞ் சித்தியாமே. 43

சித்தாவதேதென்றால் சொல்லக்கேளு
செயமாகவுப்பிலே கோடிவித்தை
முததியாய்வுப்பென்றால் வெளிதோமக்காள்
மோகமுறும்வுப்புக்கு காரமேற்றி
நத்தியேநவலோகந் தன்னிலீய
நலமாகவெல்லாமுஞ் சித்தியாகும்
பத்தியேவுப்பைமுந்தி கட்டிப்பாரு
பாலகனேவித்தையெல்லாஞ் சித்தியாமே. 44

## கெந்திதைலம்.

சித்தியாம்பின்னமொரு சேதிகேளு
செப்புகிறேன்சித்தரெல்லாஞ் செப்பாதெல்லாம்
புத்தியாய்கெந்தகத்தின் தைலங்கேளு
புகலறியகெந்தகந்தான் சேருவொன்று
நத்தியேயண்டமது யன்பத்தொன்று
நலமாகச்சட்டிதனில் தண்ணீரூற்றி
முத்தியேயவித்திட்டுப் பின்புகேளு
முடிவானயண்டமெல்லாம் யெடுத்துக்கொள்ளே. 45

எடுத்துமேயண்டத்தை யுடைத்துநீயு
மிதமாகவெண்கருவைத் தள்ளிப்போடு
யடுத்துமேமஞ்சளென்ற கருவைவாங்கு
யடவாகச்சேரொன்று கெந்தியிட்டு
பத்துமேயிதுரெண்டுங் கல்வத்திட்டு
பதிவாகயிருசாம மாட்டிநன்றாய்
விடுத்துமேபெரியதொரு யடையாய்த்தட்டி
விதமாகச்செய்கின்ற நேர்மைகேளே. 46

கேளுநீகுப்பிக்குள் நிறையத்தானே
கெடியாகயடைத்துநீ பின்புகேளு
வாறுநீகுப்பிவாய் தன்னிலேதான்
வடவாகமயிர்துருத்துப் பின்புநீதான்

வாளுநீதொட்டியைத்தா னடுவில்பொத்தி
வடிவாககுப்பியைத்தான் வைத்துநன்றாய்
கேளுநீமண்ணிலிட்டு நேராய்த்தானும்
கெடியாகயடுப்பேற்றி மேலேதானே. 47

## கெந்தகத்தையிலப்பெருமை.

மேலேதான்புடமிட்டு யெரிக்கும்போது
மேன்மைபெறயடுப்புக்குள் பீங்கானிட்டு
காலேதான்புடமாறி யெடுத்தாயானால்
கனிவாகத்தயிலமது மஞ்சள்போலாம்
மாலேதான்மஞ்சலென்ற தயிலந்தன்னை
மயமாகமண்டலந்தான் கொண்டாயானல்
காலேதான்குஷ்டமெல்லா மோடிப்போகும்
கைமுறையாங்கெந்தகத்தின் தயிலந்தானே. 48

## துருசுசெம்பு.

தானென்றகெந்தகத்தின் தயிலத்தாலே
தாஷ்டிகமாய்நவலோகம் பழுக்கும்வேதை
ஊனென்றயிந்தநூல் தன்னிலேதான்
வுறுதியாய்ச்சொல்லுகிறேன் செம்புவேதை
வானென்றதுருசதுதான் பலந்தானாலு
வடிவானசட்டிதனி லிட்டுந்தேளு
நானென்றதீயெரித்து சாமம்நாலு
நலமாகப்பார்த்திடவே வெள்ளியாமே. 49

வெள்ளையாம்துருசுநீர் பலந்தான்றெண்டு
விதமாககெந்தியது மூவரையுமாகும்
சள்ளையாம்சூடனது பலமும்றெண்டு
சார்வானவீரமது பலமுங்கால்தான்
கொள்ளையாமிதுநாலுங் கல்வத்திட்டு
கொடிதானபழச்சாற்றில் சாமம்நாலு
உள்ளையாந்தாநரைத்து வுண்டைசெய்து
யுறுதிபெறக்காயவைத்து வுண்மைகேளே. 50

கேளப்பாவதின்மேலே கவசங்கேளு
கெடியானசுண்ணாம்பும் வுப்பும்நேராய்
யாளப்பாயரைத்ததின்மேல் கவசம்பண்ணு
யதின்மேலேமண்ணரைத்து கவசம்பண்ணு

மாளப்பாபுடமிட்டுப் பார்த்தாயானல்
மாசற்றசெந்தூர மாகும்பாரு
தேளப்பாகொட்டுதல்போ லிந்தமார்க்கம்
தெகிட்டாதுதருசினிட மார்க்கப்போக்கே. 51

மார்க்கமென்னபின்புநீ செய்யக்கேளு
மதிமயங்கிப்போகாதே யப்பாகேளு
தீர்க்கமென்னவெடியுப்பு திராவகத்தை
தளரவேயிட்டுநன்றாய் வைத்துக்கொண்டு
யேர்க்கமென்னயரப்பொடியும் பலமுமொன்று
யெலிமிச்சம்பழச்சாற்று லூறவைத்து
கார்க்கமென்னதெளிவிறுத்து வைத்துக்கொண்டு
கனிவாகமுன்மருந்தை யரைத்திடாயே. 52

அரைத்துமேயில்லேதட்டி காய்ந்தபின்பு
யகலிலிட்டுமேலகலால் மூடிக்கேளு
முறைத்துமேமூன்றெருவில் புடத்தைப்போடு
முக்கியமாயாறவிட் டெடுத்துக்கொண்டு
குறைத்துமேகுகையிலிட்டு வுருக்கித்தீரு
குணமானசெம்பாகும் கூர்ந்துபாரு
வறைத்துநீசெம்பெடுத்துக் கரியில்வைத்து
வகையாகவூதிநன்றாய் வைத்துக்கொள்ளே. 53

## இரும்புருக்கு.

கொள்ளவேயரப்பொடியும் பலந்தானாலு
கொள்கியதோர்கெந்தியது பலமும்நாலு
மள்ளவேயிதுரெண்டுங் கல்வத்திட்டு
மயனமாயிருசாம மரைத்துத்தீரு
கள்ளவேகுகையியிட்டு வுருக்குநன்றாய்
கனமானமணியாகுங் கண்டுகொள்ளு
தெள்ளவேமணியெடுத்து வைத்துக்கொண்டு
திரமாகச்செய்தொழிலே சொல்லக்கேளே. 54

கேளுநீமுன்செம்பு பலமும்நாலு
கெடியாகபலமொன்று வுருக்கிரும்பு
தாளுநீதங்கமது பலமுமொன்று
தாஷ்டிகமாய்மூன்றுமொன்று யுருக்கிக்கொண்டு

பாருநீபோகாமல் களங்கமாகும்
பகாரிதுகளங்கினுட பெருமைமெத்த
சாறுநீவெள்ளியது பலந்தானென்று
சமர்த்தாககாரியஞ் சமமாய்க்கூட்டே. 55

கூட்டியேயோட்டிவிட்டு யூதிப்போடு
குணமாககசடகற்றி தகடுதட்டி
வாட்டியேவுப்புறெண்டு செங்கல்லொன்று
வடிவாககல்வத்தி லிட்டரைத்து
நாட்டியேவட்டதனில் புடத்தைப்போடு
நலமாகவெள்ளியதை மேலேவைத்து
பூட்டியேமூவஞ்சுந் புடத்தைப்போடு
முக்கியமாயெடுத்துப்பார் முறையதாமே. 56

## களங்கின்வேதை.

முறமையாய்சேர்க்கிற பாகங்கேளு
முற்றிபெறவெள்ளிதா நாலுமாகு
மருமையாங்களங்கமது வொன்றுமாகும்
மடவாகயிதுமூன்று முருக்கித்தானும்
தருமையாய்பார்த்திடவே பத்துமாற்று
திறமாகவுப்புக்குங் காவிக்கேகா
நிறமையாய்தாயைவிட்ட பாவத்தாலே
நிஷ்டூரமாகுமிது வாதந்தானே. 57

வாதமதுநிலேக்கவே சொல்லக்கேளு
வடிவானதங்கமது சாகவேணும்
சூதமதுதங்கத்தில் சேர்க்கவேணும்
சுகமானதங்கமது யெளிதிலாகுங்
காதமதுநடந்தானோர் வழியுந்தானுங்
காதலாய்துலேயுமது கருதிப்பாரு
வேதமதுபடித்தாலே ஞானமாகும்
விதமாகயெல்லாமுஞ் சித்தியாமே. 58

சித்தியாந்தங்கத்தால் வேதைகோடி
செப்பர்யசூதத்தால் வேதைகோடி
புத்தியினால்வாதசித்தி யுடனேயாகும்
புகலரியதைலத்தால் வேதைகோடி

நத்தியேகெந்தியினால் வித்தைக்கோடி
நாடாதவாதவித்தை களினமாகுஞ்
சத்தியமாய்சொல்லிவிட்டேன் முன்னூர்தன்னில்
சகலசித்திநிலைக்குமது தாக்கிப்பாரே. 59

## செம்புவேதை.

தாக்கிடவேயின்னமொன்று சாற்றக்கேளு
சாதகமாய்ச்சொல்லுகிறேன் கையின்பாகம்
வாக்கிடவேசெம்பதுவுஞ்'சேறுமொன்று
வடிவாகத்தகடாகத் தட்டிக்கொண்டு
நோக்கிடவேகல்லுப்பு சேருயெட்டு
நுருதியாய்செங்கல்மா னாலுசேறு
யாக்கிடவேரெண்டுமொன்றாய் நெகிழவரைத்து
யடவாகவரட்டிதனில் பறப்பிவையே. 60

பரப்பியேசெம்பென்ற தகடுவைத்து
பதிவாகயெருவடுக்கிப் புடமும்போடு
கரப்பியேபுடமாறி யெடுத்துத்தானே
கனிவாகவெங்கலத்தின் சட்டிதன்னில்
பரம்பியேதண்ணீரை நிறையவிட்டு
பாங்காகப்பிரட்டியெடு பண்பதாக
யுரப்பியேயலசியெடு யதிரைத்தானும்
யுண்மையாய்மண்ணில்லா தெடுத்திடாயே. 61

யெடுத்துநீயதுவெல்லாங் காயப்போடு
யிதமாகக்காய்ந்தபின்பு யின்னங்கேளு
வடுத்துமேகெந்தியென்ற தைலந்தன்னை
வடிவாகயதிலே யிட்டுமேதான்
கடுத்துமேமூன்றுநா ளூரவைத்து
கனிவாகவேயரைத்து பில்லைசெய்து
நடுத்துகமகாயவைத்து புடத்தைப்போடு
நன்மையாய்சிவந்துநிற்குஞ் செம்புதானே. 62

தானென்றசிவந்துநின்ற செந்தூரத்தை
தாஷ்டிகமாய்நேராகக் காரங்கூட்டி
வாளென்றயிதையரைத்து குகையில்வைத்து
வடிவாகயுருக்கிடவே செம்புமாகும்

நனென்றசெம்புதனில் நாலுக்கொன்று
நலமாகத்தங்கமது சேர்த்துருக்கி
கானென்றதகடாகத் தட்டிக்கொண்டுக்
கனிவாகசெந்தியது மூக்கால்சேரே. 63

சேத்துநீவீரமது காலுங்கூட்டிச்
சிறப்பாகத் தகடுக்குமேலும்பூசி
பாத்துநீபுடம்போடு நூறுங்குமட்டும்
பறிவாகப்போட்டுயெடு கருத்துப்போகும்
கார்த்துமேமயங்காதே வெள்ளிதன்னில்
கனிவாகநாலுக்கு வொன்றுகூட்டி
நார்த்துமேயுருக்கிப்பார் மாத்துகாணும்
நலமாகப்பத்தாகுந் நயந்துபாரே. 64

செம்புசெந்தூர வேதை.

நயந்துபார் செந்தூரஞ்செய்யக்கேளு
நலமாகத்திராவகத்தா லரைத்தரைத்து
பயந்துமேபோகாதே புடத்தைப்போடு
பதிவாகயிப்படிக்கிப் பத்துமுறைபோடு
கயந்துமேசெந்தூரம் முருக்கன்பூப்போல்
காரியமாய்தாமிருக்குஞ் செந்தூரந்தான்
முயந்துமேசெந்தூரம் நூற்றுக்கொன்று
மூட்டுவாய்நவலோகந்தன்னில்கேளே. 65

கேளுமே யிருபத்தியஞ்சுமாத்து
கெடியாகவர்னமது பச்சையாகும்
ஆளுமேயிதுதனையே தணிக்கக்கேளு
யடவாகசெம்புதனை வைத்துருக்கி
நாளுமேபார்த்திடவே மாத்துதானும்
நலமாகத்தணியுமது தங்கமாகும்
வாளுமேதங்கத்தை வைத்துக்கொண்டு
வளமாகஜீவனத்தைப் பண்ணிடாதே. 66

பண்ணிடவேயோகமொடு ஞானம்பாரு
பதிவாகச்சுழிமுனையில் நாட்டம்பாரு
உண்ணிடவேமண்டலத்தில் காயச்சித்தி
யுறவானவாதமது வெண்பதுந்தான்
தண்ணிடவேயோடுமது கடலேபுக்கும்
தாஷ்டிகமாய்சிலேத்பனங்க ளோடிப்போகுங்
கண்ணிடவேகள்ளிப்பால் கறந்தாப்போல்
கனிவாகச்சித்திதருங் கண்டுபாரே.

கண்டுப்பாரயச்செம்பைக் கண்டபோதே
கனிவாகயெல்லாமுஞ் சித்தியாகும்
உண்டிடவேமனமது யுமகிக்ஷியாகும்
முறுதியிதுநல்லவித்தை யுற்றுப்பாறு
கொண்டிடவேசித்தறிடங் கூடிவாழ்வீற்
குணமாகயெல்லாமுஞ் சித்திமெத்த
பண்டிடவேசித்தியெல்லாம் பண்புமாகும்
பார்ப்பவர்க்குவெகுசுளுவு பண்புதானே.

பண்பாகயின்னமொரு சேதிகேளு
பதிவாகஞானகர்ப்ப யோகமாகும்
கண்பாகநாகரச தைலந்தன்னைக்
கனிவாகச்செய்திடவே யுலகத்தோர்க்கு
நண்பாகநவலோகம் பழுக்கும்வேதை
நாட்டியேகைபாகவ ரிசைநேர்மை
யுண்பாரையுடுப்பாரைப் பார்த்துயேங்கி
யுறவழிந்துபோகாதே வாதம்பாரே.

வாதமென்றால்கொஞ்சத்தில் கிடைக்குமோசொல்
மகத்தானயோகிமுதல் ரிஷிகள்சித்தர்
நீதமென்றபஞ்சகர்த்தா ளிவர்கட்கெல்லாம்
நிரைநிரையாய்ப்பார்த்திடினும் தப்பிப்போகும்
வேதமென்ற யஞ்சாம்வேதத்துக்கொக்கும்
விரைந்துமனோன்மணித்தாயார் சொல்லக்கேட்டு
பாதமென்றபாதத்தை சிரசில்வைத்துப்
பறிவாகநாகரச கெந்திப்பாரே.

### நாகரசகெந்தி தைலம்.

நாகரசகெந்தியென்ற குருவைத்தானும்
நாதாக்களொளித்திட்ட குருவைக்கேளு
தாகமதாய்கைபாக வரிசைகேளு
தாஷ்டிகமாய்நாகமது பலமுமொன்று
யோகமாய்நாகத்தின் சுத்திகேளு
யொத்துமே யிலுப்பநெய்தன்னிலப்பா
பாகமாய்பத்துவிசை யுருக்கிச்சாய்க்கப்
பண்பாகவூரலற்றுக் கட்டும்பாரே. 71

கட்டியதோர்நாகத்தைக் கறண்டிலிட்டு
கனலிலிட்டு யுருக்கியேகருணையாகத்
திட்டமுடன்ரசந்தன்னை யதிலேவாரு
தாஷ்டிகமாய்ரசத்தையுமே நாகமுண்ணும்
பட்டிகமாய்தவளையும் பாம்புந்தானும்
பதிவாகமுழுங்கினதுபோல் முழுங்கும்
அட்டியில்லை மய்யர்சொன்னகைபாகத்தை
யன்பாகச் சொல்லுகிறே நறிந்துக்காணே. 72

அறிந்துமேயிந்தயெடை கெந்திசேர்த்து
அப்பனேயதையிட்டு சாமமூன்று
கறிந்துமே யரைத்ததனை வில்லைசெய்து
கனமான றவிதனிலே யுலரப்போடு
பறிந்துமேயுலர்ந்தபின்புச் சொல்லக்கேளு
பண்பாகயெருவடிக்கி புடத்தைப்போடு
நறிந்துமேதைலமது யொரங்கும்பாரு
நலமாகத்தைலத்தை யெடுத்துக்கொள்ளே. 73

### மாற்றுயர.

தைலத்தையெடுத்துமே சொல்லக்கேளு
தயவாகமதிதனிலே யீந்தால்கேளு
யகிலமெல்லாங்குடுத்தாலுந் தைலமீவலை
யாச்சரியங் கெந்தகத்தின்போக்குமெத்த
தைலமதில்தணிந்தபொன்னை தையிலத்தில்தோய்த்து
தாஷ்டிகமாய்ப்புடம்போட்டு வுருக்கிப்பாரு
வயிலமாய்மாத்துதான் பத்துமாகும்
வடிவாகக் கைபாகமாகச்செய்யே. 74

## கருவங்கச்செந்தூரம்.

செய்யவேயின்னமொரு களங்குகேளு
செப்புகிறேன் னுலகத்தில்சொல்லாநீதி
நையவேகாரியஞ்சேர்தானென்று
நலமாகச்சுத்திபண்ணி குகையிலிட்டு
மெய்யவேயுருகையிலே யிடைதான்கேளு
மேன்மைபெறக்கெவுரிதனை யிய்ந்திட்டாக்கால்
பையவேநொறுங்கியது தூளுமாகும்
பதிவாக வயசட்டிதன்னிலிட்டே. 75

இட்டுமேகல்லுப்புச் சேர்தானென்று
இதமாகக்குடுத்து வறுபயமில்லாமல்
கட்டுமேயிருசாமம் வறுத்தபின்பு
கருவாகக்கற்றாழைப் பாலாலாட்டி
வட்டுமேபெரியபுடம் போட்டுத்தீரு
வடிவாகச்செந்தூர முருக்கம்பூப்போல்
நட்டுமேயிருந்துவிடும் நாலத்தோன்று
நலமாக வங்கசெந்தூரந்தானே. 76

தானென்றசெந்தூரந் தன்னிலேதான்
தாஷ்டிகமாய்தாளகமுஞ் சூதஞ்சேரு
வானென்றபுகைநீரா லரைத்துக்கொண்டு
வடிவாகக்காயவைத்து வண்மையாக
நானென்றபகலிலிட்டுப் புடத்தைப்போடு
நலமாகச்செந்தூர முருக்கம்பூப்போல்
கானென்றயிருக்குமது செம்புநூற்றில்
கனிவாகயொன்றிடவே கனகமாமே. 77

கனகமாம்வங்கத்தைக் கண்டபோதே
காதலுடன்செல்வங்கள் மெத்தவுண்டு
வனகமாம்வங்கமென்ற ராஜாவாலே
வடிவானசகலகுரு வழியுமாகும்
வுனகமாம்வாதமெல்லா மேதினாலே
வுறுதிமிகயுண்டாகும் வுற்றுப்பாரு
தனிகமாம்வழலையெல்லாம் வங்கத்தாலே
தாஷ்டிகமாயெல்லாமுஞ் சித்திகாணே. 78

### உப்பின் பெருமை.

காணவே யுப்பைமுந்திகட்டிப்பாரு
கனகமாயர்வதற்குக் கருத்துவேணும்
பூணவேயுப்பாலே யெல்லாமாச்சு
புகலறிய வுப்புக்குக்காரமேத்தி
தோணவேயுப்பென்றால் பெறிதேயல்லால்
துரிதமுடனுப்பதுவுங் கட்டிற்றனல்
பாணவேவங்கத்தை முந்திக்கட்டு
பகலிரவுந்தோற்றுமந்த வாட்டமாமே. 79

வாட்டமாய் கைபாகமாகச்செய்தால்
வடிவாகுங்களங்காகுங் குருவுமாகும்
பூட்டறியபூட்டெல்லாம் யுப்பினாலே
புகலரியகட்டுவகை யுப்பினாலே
தேட்டமாயுப்பைவிட்டோர் கெட்டாரப்பா
செகச்சாலமாவதற்கு யுப்பைகட்டு
நாட்டவேயுப்பெல்லாங் கருமத்தாலே
நாடினால்சித்திக்கும் வுப்புதானே. 80

தானென்றவுப்புக்கு காரமேற்று
தாஷ்டிகமாய்வயற்றுவலி குன்மம்போகும்
வானென்றவறிசையாய் செய்துகொண்டு
வடிவானசரக்கெல்லா மிறுகிக்கட்டுங்
கானென்றபூதத்தைக் கண்டுதானுங்
கனிவாகப்பார்த்தல்லோ செய்துக்கொண்டு
நானென்றவாணவத்தை தள்ளிப்போடு
நலமாகவாதவித்தைக் கண்டுதேரே. 81

கண்டுகண்டு தேறியேமனதைக்கட்டு
கனிவாகயெல்லாமுஞ் சித்தியாகும்
பண்டுவிட்டகுருவாலே வருவதாகும்
பதிவாகவாதமென்றால் யெளிதிலாமோ
மூண்டுவிட்டு கைபாகமாகச்செய்து
முனைந்துநீபார்த்தாக்கால் தெறியுமப்பா
வண்டுபோலலையாதே நூலைப்பாரு
மயங்காதே யறிவுகுருவாகும்பாரே. 82

### தங்கவுறம்.

ஆகுமேதங்கவுறஞ் சொல்லக்கேளு
வாச்சரியம்யிதுவேகு முன்னேபாரு
வாருபெறத்தங்கவுறங் கண்டபோதே
வலுவானநோய்களெல்லா மாண்டுபோகும்
பாகுபெறநோயெல்லாம் தவிடுபொடியாகப்
பண்பாகச்சொல்லுகிறே னுற்றுக்கேளு
தாகுபெறத்தங்கம்போல் வைத்துக்கொள்ளு
தாஷ்டிகமாயிம்முறையை வைத்திடாயே. 83

வைத்திடவேயின்னமொறு சேதிகேளு
வடிவாக வெள்ளியஞ்சுத்திசெய்ய
கைத்திடவேகறண்டிதனி லுறுக்கிக்கொண்டு
கனிவாகவெள்ளாட்டு யமுறிதன்னில்
நைத்திடவே யமுதிறமுறிக்கிச்சாய்க்க
நல்லசுத்தியாயிருக்கும் நயந்துபாரு
பைத்திடவேசுத்திசெய்த யீயந்தன்னை
பதிவாகப்பலமாறு நிறுத்துக்கொள்ளே. 84

கொள்ளவேகரண்டிதனி லுருகும்போது
குணமாகயெண்ணை குத்தி குளகுளக்க
துள்ளவேசூதமது பலமுமாறு
துடிவாகயுறுகும்போ திரதம்வாறு
விள்ளவேரெண்டுமொன்று யுருகிநிற்கும்
விதமாகயாறவிட் டெடுத்துக்கொள்ளு
தள்ளாமல் கலுவைத்திலிட்டுடைத்து
தாஷ்டிகமாய் பிட்டாகுஞ்சார்ந்துபாரே. 85

பாருநீகெந்தகந்தான் பலமுமாறு
பதிவாகச்சீனமது பலமுமாறு
காருநீசாரமது பலமுமாறு
கனிவாகயிதுவஞ்சும் நிறுத்துக்கொண்டு
தாருநீவாய்நீரை விட்டுக்கொண்டு
சாதகமாய்சாமமது வறைத்துநீயுஞ்
சாருநீகாயவைத்து பின்புதானுஞ்
சரியானகைபாக வரிசைகேளே. 86

வரிசையாமறைபுட் டிகுப்பிதன்னில்
வாகாகவடைத்துநீ பின்புகேளு
வரிசையாய்கோணிதான் சவுக்கமாக
வுகந்துமேவலுவாகச் சீலைசெய்து
நரிசையாய்காயவைத்து சட்டியொன்று
நலமாகநடுவிலே பொதிந்துக்கொண்டு
கரிசையாய்குப்பிதனை நடுவிலிட்டு
கனிவாகநாலுவிர லடியில்தானே.- 87

தானென்ற வடிதனிலே தெரியச்செய்து
தாஷ்டிகமா யுள்ளேதான்மணலையிட்டு
வானென்ற குப்பிவாய்தெரியவிட்டு
வடிவாகநால்சாமம் கமலம்போலே
காநென்றதீயிட்டு சிலாக்கையாலே
கனிவாகக்குத்தியே யெரித்துப்பாரு
நாநென்றவடுப்பாற்றி பிரித்துத்தானும்
நலமாகமெள்ளவே யெடுத்திடாயே. 88

வெள்ளிவுரம்.

எடுத்திடவே குப்பிதாநொரிங்கிப்போகும்
யேழைமதிபோகாதே யெடுத்துப்பாரு
அடுத்துமே தங்கம்போல்நிறமுமாகு
மன்பாகதங்க வறப்பொடிபோல்காணுந்
தடுத்துநீசினத்தை தள்ளிமைந்தா
சரக்குத்தா நாலுநீசேர்த்தரைத்து
விடுத்துநீமுன்போலே யெரித்துப்பார்த்தால்
விதமாக வெள்ளியரப்பொடிபோலாமே. 89

தாதுவுறு லேக்கியம்.

ஆமேதான்தாதுவுட குணத்தைக்கேளு
யன்பாகசாதிக்காய் லேக்கியத்தை
வாமேதான் சாதிக்காய்பலமுமொன்று
வடிவானபத்திரியுங் கிரும்புயேலங்

காமேதான் கோஷ்டமொடுவால்மிளகு
கனிவானகசகசா மதுரந்தானும்
காமேதான் வகைக்கொன்று பலம்நிறுத்து
நலமாக யிளவருப்புச்செய்திடாயே. 90

செய்திட்டுபின்புதான் சொல்லக்கேளு
ஜெயமாகபசுவின்பால் படிதானொன்றில்
பைதிட்டுசட்டியில்விட் டடுப்பிலேற்றி
பண்பாகத்தியெரிப்பாய் கமலமாக
நைதிட்டுயெரித்திடவே சர்க்கரையைவிட்டு
நலமாகப்பதமாகக் காச்சிக்கொண்டு
வைதிடவேமுன்மருந்தை தூவிக்கொண்டு
வளமாகயாவிநெய் யதனிலூற்றே. 91

ஊற்றியேலேக்கியமாய்ப் பண்ணிக்கொண்டு
யுண்மையாய் பாக்களவுயந்திசந்தி
நாற்றிசையுமெய்க்கவே சொல்லக்கேளு
நலமாகதங்கவுறம் பணந்தான்வீதஞ்
சாத்தியேமண்டலந்தா னுண்ணும்போது
சரீரத்திலுள்ளநோய் தவறண்டேபோம்
மாற்றியேமன்மதன்போல் தேகமாகும்
மயமானவிந்துருகும் வடிவதாமே. 92

ஆமேதாநனுபோகஞ் செய்யும்போது
யடவானவிந்துதான் கிழ்நாடாது
தாமேதான்பெண்களெல்லாம் மயங்கிப்போவார்
தயவாகத் தங்கவுறமுண்டதாலே
வாமேதான்பத்தியத்தை சொல்லக்கேளு
வடிவாகப்பாலன்னம் புசித்துத்தீரு
காமேதான்டச்சைநரம் பிறிகிக்காணுங்
கனிவாகநோய்களெல்லா மோடிப்போமே. 93

ஓடுமேதங்கவுறங் கண்டபோதே
யோதறியகுஷ்டமுதல் கருங்குஷ்டந்தான்
நாடுமேயிதைவைத்து ஜீவனத்தை
நலமாகச்செய்திடவே சகலசித்தி
கூடுமே கைபாகமாகச்செய்து
கூடுதற்குமுன்னேதான் குணமாய்வைத்து
தேடுநீநவலோகந் தன்னிலீய
திடமாகமாத்தென்ன பத்துமாமே. 94

ஆமேதான்தங்கவுறந் தன்னைக்கண்டா
லடைவானரோயெல்லா மோடிப்போகும்
வாமேதான்தங்கவுறம் வைத்தப்பின்பு
வாதாடும்வயித்தியத்தில் வலுமைமெத்த
தாமேதான்பார்த்திடவே ஜீவனத்தை
தாஷ்டிகமாய்செய்திடவே பின்புநீயுங்
காமேதான் பஞ்சபூதத்தைக்காணு
கனிவாகப்பார்த்திடவே சித்தியாமே. 95

பஞ்சலோகச் செந்தூரம்.

ஆமேதான் பஞ்சபூதத்தைத்தானும்
யன்பாகக் கைவரிசையாகச்சொல்வேன்
தாமேதான்மாத்தெல்லாம் பஞ்சபூதந்
தாஷ்டிகமாயிதைவைத்து நவலோகத்தில்
காமேதான்கொடுத்திடவே மாற்றுமாகுங்
கனிவானபூதத்தி லொன்றுதப்பில்
வாமேதான்பலபலவாம் வாதங்காணும்
வடிவானவாதமது பிசகுந்தானே. 96

தானென்றவாதத்தை விட்டாயானால்
தாற்குரும்பாய்த்திரிவாய் பெண்ணைச்சேர்ந்து
யூனென்றகாயமது நிற்காதப்பா
யுருதியாய்க்காயமது நிற்கவேண்டில்
வானென்ற பஞ்சபூதத்தைச்செய்து
வடிவாகச்செந்தூரம் வைத்துக்கொண்டு
கானென்றுவுண்டிடவே காயந்தானுங்
கனிவாகயுகவரைதா நிருத்துந்தானே. 97

### தங்கம்.

இருத்துமே பஞ்சலோகத்தைக்கேளு
இதமாகத்தங்கமது பலமுமொன்று
கருத்துமேகாச்சியே தகடுதட்டி
கனிவாகக்கல்காவி பழச்சார்விட்டு
ருத்துமேயரைத்துநீ தகட்டின்மேலே
நலமாகக்காச்சிமுன்னே தடவியேதான்
உருத்தியேயெழுதிரந் தோய்த்திட்டாக்கால் 98
யுறவாகச்சுத்தியாந் தங்கந்தானே.

### காரீயம்.

தங்கமாந்தங்கத்தை சுத்திசெய்து
தாஷ்டிகமாய் விபரமினி சாத்தக்கேளு
துங்கமாங்காரீயம் பலமுமொன்று
துடியாகக்கத்தாழம் பாலால்சுத்தி
பங்கமாயேழுதிர முரிக்கிச்சாய்த்துப்
பதிவாகச்சுத்திபண்ணி பின்புகேளு
சங்கமாய்காண்டிதனில் வைத்துருக்கி 99
சத்தியமாஞ்சூதமதை யதனிலூற்றே.
ஊற்றியேநல்லெண்ணை கொஞ்சங்குத்தி
யுருதியாயாரவைத்துப் பின்புகேளு
நாற்றிசையுமெய்க்கவே யாரவிட்டு
நலமாகயெடுத்துநீ கழிவிப்போடு
வாற்றியே கல்வத்திலிட்டுக்கேளு
வளமான கெந்தியரைபல்மேயிட்டு
காற்றியேபுகைநீரா லரைத்துசாமங் 100
கனிவாகவில்லைதட்டி காயப்போடே.

### செம்பு.

காயவேவைத்தபின்பு பாகங்கேளு
கனிவாகயகலிலிட்டு மேலேமூடி
காயகமாய்மண்ணரைத்துச் சீலைசெய்து
நலமாகப்பத்தெருவில் புடத்தைப்போடு

மாயவேயெடுத்துநீ தூரவைத்து
மயமாகப்பின்பொன்று சொல்லக்கேளு
சாயவேசெம்பதுவும் பலமுமொன்று
தான்காச்சித் தகடாகத்தட்டிக்கொள்ளே. 101

தட்டியேருவி யதைக்கல்வத்திட்டு
தாஷ்டிகமாய் லிங்கமரைப்பலந்தான்கூட்டி
வட்டியேபுகைநீருல் சாமமாட்டி
வடிவாகவில்லைதட்டிக் காயப்போடு
நட்டியேயகலிலிட்டுப் புடமுந்தீரு
நலமாகச்சிறுசாகப் போட்டுத்தானுங்
கட்டியேயெடுத்துநீ தூரவைத்து
கருத்தாகப்பின்புதான் கருதக்கேளே. 102

## இரும்பு.

கருதவேயிரும்பதுவும் பலமுமொன்றுக்
கனிவாகக்கெவுரியது பலமுமொன்று
வருதவேரெண்டும்நீ நிருத்துக்கொண்டு
வடிவான கல்வத்திலிட்டுக்கொண்டு
நருதுமேபுகைநீரை விட்டுயாட்டி
நலமாகக்குகையிலிட்டு வுரிக்கினுக்கால்
நருதவேயுருகியே மணிபோலாகும்
நலமானவெள்ளிமணி போலேயாமே. 103

## நாகம்.

ஆமேதானுருகினதோ ரயத்தைத்தானும்
நலமாகதூரவைத்துப் பின்புகேளு
காமேதானுகமது பலந்தானொன்று
கலங்காமலினுப்பெண்ணை தன்னில்தானும்
நாமேதானுருக்கியே கரண்டிதன்னில்
நலமாகச்சூதத்தைப் பாதிவிட்டு
வாமேதாநல்லெண்ணைக் கொஞ்சங்குத்த
வளமாகப்புட்டாது மெடுத்துக்கொள்ளே. 104

## அருசி செந்தூரச்செம்பு.

எடுத்துமேதாளகமும் பாதிசேர்த்து
இதமாகப்புகைநீரை விட்டரைத்து
நடுத்துமேவில்லைதட்டிக் காயப்போடு
நலமாகக்காய்ந்தபின்பு நாட்டக்கேளு
யடுத்துமேயகலிலிட்டுப் புடத்தைப்போடு
யடவாகவாறினபின் னெடுத்துப்பாரு
கடுத்துமேசேர்க்குகிற வரிசைகேளு
கனிவாகத்துரிசியது சேறுவொன்றே. 105

ஒன்றாகச்சீனது சேருவொன்று
யுருதியாயண்டோடு சேருவொன்று
நன்றாகக் கல்வத்திலிட்டுத்தானும்
நலமாக வெண்கருவா லரைத்துமைபோல்
வன்றாகவரைத்துநீ வில்லைதட்டி
வளமாகப்பெரியபுடம் போட்டுத்தீரு
கன்றாகக் கல்வத்திலிட்டுத்தானுங்
கனிவாகயரைத்துநீ துரிசிமேலே. 106

மேலாகக்கட்டியே பின்புகேளு
மேன்மைபெறமேல்கவசம் கட்டித்தானுங்
காலானபெரியபுடம் போட்டுத்தீரு
கனிவாகவதைப்பிரித்துப் பார்த்தாயானால்
நாலானசெந்தூரம் போலிருக்கும்
நலமானகுகைதனிலே வைத்துருக்கச்
சேலாகவுருகியது நல்லசெம்பாஞ்
செகச்சாலவித்தைக்குத்திரமாம்பாரே. 107

## பஞ்சலோகக்களங்கும் வேதையும்

பாறுநீசெம்புதான் பலமும்நாலு
பதிவாகத்தங்கமொன்று முன்னேதாக்கு
சாறுநீபின்னேதான் காரீயத்தைத்
சாதகமாயுருகையிலே கிறுசமிட்டு

ஏறுநீபின்னேதான் லிங்கம்தாக்கு
இதமாகயதன்பின்னே யயத்தைத்தாக்கு
வாறுநீயதன்பின்னே நாகந்தாக்கு
வடிவாகயஞ்சுந்தா முருக்கிப்பாரே. 108

உருகுமேயஞ்சுந்தான் முருக்கிப்பாரு
முருதிமிகக்குருவாகும் வெள்ளிதன்னில்
நருகும்மெயெட்டுக்கு ரெண்டுதாக்கு
நலமாகவூதிவிட் டெடுத்துக்கேளு
பெருகுமேயெட்டேகால் மாத்துக்காணும்
பிசகாதுயுப்புக்கும் காவிக்கப்பா
கருதியேபோகாது கைபாகத்தைக்
கருவாகச்சொல்லுகிறேன் கண்டுபாரே. 109

பாருமேயிதைவைத்து ஜீவனத்தைப்
பக்குவமாய்ப்பார்த்துநீ பின்புகேளு
வாருமேவாசி யோகத்தைப்பாரு
வடிவாகஞானவழி யெடுத்துக்காட்டும்
ஏருமேவுழுத்ாலே வாதமாகும்
ஏரில்லாதுகத்தடிக் கதைபோலாகுஞ்
சாருமேயொன்றைவிட் டொன்றுசெய்தால்
சரியில்லாதவேர்கள் வாதிதானே. 110

தானென்றகளங்கத்தைச் செந்தூரிக்க
தாஷ்டிகமாயிதுலகுவு முன்னேபாரு
வானென்றகளங்கமதைப் பலம்நிறுத்து
வடிவாககெந்தியது நாலத்தொன்று
கானென்றவீரமது நாலத்தொன்று
கனிவாகக்கல்வத்தி லிதனையிட்டு
நானென்றபுலைகநீறுல் ஜாமமாட்டி
நலமாகவில்லேதட்டி காயப்போடே. 111

போட்டுநீயகலிலிட்டுப் புடத்தைப்போடு
பொலிவாகத்தீயாற்றி யெடுத்துப்பாரு
காட்டுநீசெந்தூர முறுக்கம்பூபோல்
கனிவாகயிருக்குமது வேலோகத்தில்

நாட்டுமேநூற்றுக்கு வொன்றுதாக்கு
நலமாகப்பத்தரைதான் மாற்றுகாணும்
வாட்டுமேவுப்புக்குங் காவிக்கேகா.
வளமாகவுண்டிடவே நாட்டங்கேளே. 112

பஞ்சலோகச் செந்தூரத்திற்கு தீரும் வியாதி.

நாட்டமாயந்திசந்தி யுண்ணும்போது
நல்மாகநறைதிறைக ளற்றுப்போகும்
வாட்டமாய்நோயெல்லாந் தவிடுபொடியாகும்
வடிவாகவாதமது தீர்ந்துபோகுங்
கூட்டவேபித்தமது போகுமப்பா
கூர்ந்துப்பாற் பலபிணியுங்குடிகெட்டோடும்
மூட்டுமேமகோதாமு மோடிப்போகும்
மூதண்டக்கூடமெல்லாம் முடிவுதானே. 113

தானென்றநூல்தனிலே நாதாக்கள்சொன்னார்
தாஷ்டிகமாய் நவலோகம்வேதையாக
வானென்றமுந்நூற்றில் வெளியாய்ச்சொன்னேன்
வடிவாகயிந்தநூல் தன்னைப்பாரு
கானென்றகைபாகம் வெளியாய்ச்சொன்னேன்
கடினமென்றுபோகாதே கருதிப்பாரு
நானென்றவாணவத்தால் வெளியாய்ச்சொன்னேன்
நலமாகச்சொன்னதெல்லாம் சித்தியாமே. 114

சித்தியாம் நாதாக்களேதுசெய்வார்
சிறப்பாக கைபாகமாகச்செய்வார்
புத்தியாய்கைபாக யினமறிந்து
புனிதமாய் செந்தூரஞ்செய்துக்கொள்வார்
நத்தியேபாகமதைக் கண்டபோதே
நலமாகநூல்மரமந் தெரியலாகும்
பத்தியுடந்நூல்மறமந் தெறிந்தபோதே
பகலிறவாய்ஞானம்வந்து நிலைக்கும்பாரே. 115

சூதக்கட்டு.

பாருநீசூதத்தைக் கட்டில்வேதை
பகறியப்பொன்னுகும் வேதையாகுங்

காருநீசெம்புதனைக் களிம்பெடுக்க
கனிவாகக்களிம்புதான் போகுமப்பா
வாருநீகட்டாகும் மெழுகுமாகும்
வடிவாகயெல்லாமுஞ் சித்தியாகுஞ்
சேருநீசூதத்தைக் கட்டக்கேளு
சிரப்பாகக்கட்டுதற்கு வகையைக்கேளே. 116

கேளுமேசூதமது கட்டக்கேளு
கெடியாகத்துருசதுவும் சூதத்தைக்கொல்லும்
வாளுமேலச்சையென்று மயங்கவேண்டாம்
வடிவாகத்துருசதுவும் பலமும்ரெண்டு
நாளுமேயயக்கரண்டி தன்னைத்தானே
நன்றாகத்தான்வெளுக்கத் தேய்த்தலம்பி
சாளுமேவெள்ளையாய்த் தேய்த்துத்தேய்த்துச்
சரியாகயலம்பியே சொல்லக்கேளே. 117

சொல்லக்கேள்துரிசதனைப் பொடித்துக்கொண்டு
சருக்காரைப்பழச்சாறு நிறையவிட்டு
கல்லவேசூதமது பலமுமொன்று
கனிவாகக்கரண்டிதனில் விட்டுப்பின்பு
நல்லவேமூன்றுநா ளூரத்தானும்
நலமாகவைத்துப் பின்னெடுத்துக்கொண்டு
மல்லவே கல்வத்திலிட்டுநீயும்
மயமாகக்கழுவியே தண்ணீர்வாரே. 118

வார்த்துடனே நன்றாகக்கழுவிக்கொண்டு
வடிவாகயட்டைபோ லிருக்கும்பாரு
காத்துமேதுணியிலிட்டுப் பிழிந்திட்டாக்கால்
கனிவாகக்கட்டியா யிருக்குமப்பா
நாத்துமேகட்டியே யிறுகினத்தை
நலமாகவுண்டையா யுருட்டித்தானும்
பார்த்துமே குளிர்ந்ததண்ணீர்க்குள்ளேயிட்டு
பறிவாகமூன்றுநாள் போட்டுவையே. 119

சூதக்கட்டுப்பு மார்க்கம்.

போட்டுமே மூன்றுநாள்கழிந்தபின்பு
புகழாகயெடுத்துநீ சொல்லக்கேளு

நாட்டுமேகல்லுப்பு பலமும்நாலு
   நலமாகக் கல்வத்திலிட்டரைத்து
வாட்டுமேயுண்டைக்கி கவசங்கட்டி
   வடிவாகக்காயவைத்துப் பின்புகேளு
மூட்டவேகடல்நுறைதான் சேருவொன்று
   முனிவாகமேனியிலேக் கால்தானுமே. 120

ஆமேதானிதையரைத்து வுண்டைமேலே
   யடைவாகக்கட்டியே காயவைத்து
நாமேதான்பத்தெருவில் புடத்தைப்போடு
   நலமாகயாறினபின் னெடுத்துநீயும்
வாமேதான் கவசத்தைப்பிரித்துப்பாரு
   வளமாகக் கடல்நுறையைத்தள்ளிப்போட்டு
தாமேதானுப்புரச மெடுத்துக்கொண்டு
   தயவாகவைத்திடவே நல்லதாகும். 121

சூதக்கட்டுப்புகுவேதை.

நல்லதுதான்செம்புதனில் பத்துக்கொன்று
   நலமாகக்கொடுத்துருக்கி யெடுத்துக்கொண்டு
கல்லேதானதையுடைத்து வெள்ளியெட்டில்
   கனிவாகவொன்றுதான் குடுத்துருக்க
வல்லதான்பார்த்திடவே மாத்துயெட்டு
   வாகாகவுப்புக்குங் காவிக்கோடா
சல்லாபமாகவே புடமிறங்குஞ்
   சரியாகயிதைமுன்னே வைத்திடாயே. 122

வைத்துநீயிந்தயுப்பைத் தின்றாயானால்
   வடிவானநரைதிரைக ளோடிப்போகுங்
கைத்துநீபோகாதே யுப்பைத்தின்றால்
   கனிவாகயெல்லாமுஞ் சித்திமெத்த
வித்திலேவிளைந்ததொரு பாகமாகும்
   விதமாகும் நவலோகம்மேன்மையாகுஞ்
சத்தியமாய்நோய்களறுங் காணுமோடுஞ்
   சரியானபொருளாகுஞ் சார்ந்துபாரே. 123

பாருநீமுன்னேதான் துப்பைப்பாரு
பதிவானவுப்பதுதா னெளிதோமக்காள்
யாருமேசொல்லார்க ளுப்புமார்க்கம்
யடவானகைபாகம் நேர்மைமெத்த
கோருமேகருவைத்தா னறியவேணுங்
குணமானயுப்பிலே யெல்லாமாகும்
வாருமேவுப்பில்லாக் கருமமெல்லாம்
வழும்பாச்சியாதியுப்பு வாண்மைகேளே. 124

ஆண்மையாம் உப்படங்கிக்கட்டினுக்கால்
யாறுபத்து நாலுசித்தியாடலாகும்
வண்மையாய் வாதமது யேவல்கேழ்க்கும்
வடிவாகயோகமது சித்தியாகுந்
தண்மையாம் வுப்பிலேயெல்லாமாச்சு
தாஷ்டிகமாயுப்பைவிட்டா லெல்லாம்போச்சு
பொன்மையாமாத்தெல்லா முப்பினாலே
புரண்டோடுங்கெவுணமது உப்பாலாச்சே. 125

ஆச்சப்பா வுப்பைவிட்டால் ருசியோபோச்சு
யோடுகிறகாலுக்கு வுறுதிபோச்சு
பாச்சப்பாயப்பைவிட்டு உப்பைக்கட்டி
யாடலாமொருகோடி வித்தைதானும்
வுப்பைவிட்டிலுப்பதுவுஞ் சிவந்துதானால்
யாடலாமொருகோடி வித்தையப்பா
தப்பிதமாய்ச்சொல்லவில்லை யுப்பின்போக்கு
சாக்ஷியாயெல்லாமு மறிந்திடாயே. 126

அயச்செம்பு.

அறிந்திடவே யின்னமொருசேதிகேளு
ஆதியாமயச்செம்பு சொல்லக்கேளு
பரிந்திடவே அயப்பொடியும்பலமோபத்து
போரானபழச்சாற்றி லூறவைத்து
நரிந்திடவேமூன்றுநாள் சென்றபின்பு
நலமாகவதையலம்பி நாட்டக்கேளு
வரிந்திடவேதுரிசியது சேர்தாநொன்று
வடிவாகெந்தியது முக்கால்சேரே. 127

சேர்த்துநீமூன் றமொன்று யரைத்துக்கொண்டு
சிறப்பானபழச்சாறு கூடவிட்டு
பார்த்துமேயரைத்து வுண்டைபண்ணிநீயும்
பதிவாகக்காயவைத்துப் பின்புகேளு
கார்த்துநீவுப்படனே சுன்னமிட்டு
கனிவாகவுண்டைக்கிக் கவசங்கட்டி
வார்த்துமே மண்கவசமேலேகட்டி
வளமாகப்பத்தெருவில் புடத்தைப்போடே. 128

போட்டுமேயெடுத்துப்பார் கறுப்பாய்நிற்கும்
புகலாதேகுகையிலிட்டு காரங்கூட்டி
காட்டுநீயுருக்கிடவே சத்துமாகுங்
காரணமாய்சத்தெடுத்து காரங்கூட்டி
வாட்டுநீகாரத்தைப் பாதிகூட்டி
வடிவாகயிருசாம மரைத்துப்பில்லை
நாட்டியேகாயவைத்துப் புடத்தைப்போடு
நலமாகக்குகையிலிட் டுருக்கிடாயே. 129

உருக்கிடவே சத்தாகுஞ் சத்துதன்னை
யுருதியாய்வெண்காரம் பாதிசேர்த்து
நரிக்கிடவேபழச்சாற்று லரைநால்சாமம்
நலமாகவில்லைதட்டிக் காயப்போடு
பெரிக்கிடவே பெரியபுடம்போட்டுத்தீரு
பேசாதேகுகையிலிட்டு வுருகக்நன்றாய்
நெரிக்கிடவே யிப்படிக்குத்திராமுமஞ்சி
நேராகவுருக்கிடவே சத்துமாமே. 130

ஆமேதான்சத்துதான் வெள்ளையாகும்
அடவானசத்துதனை பிரிக்கக்கேளு
நாமேதான்வீரமது ஒன்றுகூட்டி
நலமாகப்பழச்சாற்று லரைத்துநன்றாய்
சாமேதான்பார்த்திடவே மஞ்சள்போலாஞ்
சரியாகக்கிடத்திவிட்டு யெரித்துப்போடு
வாமேதான்வீரமது வுயரயேறும்
வடிவாகயடியில்நிற்கும் மருந்துதானே. 131

## அயச்செம்புவேதை.

மருந்தெடுத்துக் காரத்தைக்கூட்டிநீயும்
வடிவாகக்குகையிலிட்டு வுருக்கித்தீரு
கருந்தாதேசிகப்பாகுஞ் சிகப்புமெத்த
காசினியலிச்செம்பு நல்லதாகும்
வருந்தாதேவெள்ளிதனில் கொடுத்தாயானல்
வடிவாகமாத்தேழு காணுங்காணும்
யருந்தவேவுப்புக்குங் காவிக்கேகா
யாண்மையாயிதைவிற்று ஜிவனமேசெய்யே. 132

## அயச்செம்பு களங்குவேதை.

செய்யவே அயச்செம்பு வெள்ளிதன்னில்
திறமாகக்கொடுத்திடவே மாத்து யெட்டு
பையவே அயச்செம்பைக் கண்டபோதே
பதிவாகக்கலியெல்லாம் பறந்துபோகும்
மெய்யவே அயச்செம்பு பலமும்நாலு
மேன்மையாந்தங்கமது பலமுப்நாலு
நைய்யவேரெண்டுமொன்ற யுருக்கிநல்ல
நலமாகத்தகடுதட்டி நாட்டக்கேளே. 133

நாட்டமாய்நாலுக்கு ஒன்றுகெந்தி
நலமாகவீரமது காலதாகும்
கூட்டமாயிதுரெண்டு மரைத்துமேலே
குணமாகத்தடவிய புடத்தைப்போடு
வாட்டவேதகடதுவும் நொறுங்கிப்போகும்
வடிவாகவெள்ளிதனில் நாலுக்கொன்று
ஆட்டவேகொடுத்துறக்கு மாத்துப்பத்து
உறுதியாய்வாதமீதில் ஒழுங்குமாமே. 134

ஒழுங்காகும் அயச்செம்பைக்கண்டபோதே
உறுதியாய்வாசி யோகத்தைப்பாரு
அழுங்கவேமுன்னேதான் யயத்தைப்பாரு
படவாகச்செந்தூரம் பண்ணியுண்ணு

கழுங்கவே அயத்தினிடமேனியாகும்
நலமானகருவாகும் நாடிப்பாரு
வழுங்கவேமனமொன்றாய்க் கூடும்பாளி
வளமானபொருளாகும் நாடிப்பாரே. 135

நாடிப்பார்முன்னேதா நயத்தின்செம்பை
நலமாகவைத்துநீ வேலைசெய்து
கூடிப்பார்கூட்டுமுறை கண்டவாதி
குணமாகயெல்லாமுஞ் செயமுமாகும்
வாட்டியேகெந்தகத்தால் வரணமெத்த
வடிவாகத்தாளகத்தால் வர்ணமெத்த
கூட்டியேகூட்டறிந்து குடுத்துப்பாரு
குணமாகயெல்லாந்தான் கூர்ந்துபாரே. 136

கூர்ந்துமே பஞ்சபூதத்தைக்கண்டு
குறிப்பானநேர்மைகண்டு சேர்வைகண்டு
ஆர்ந்துமே தங்கமில்லாவாதமில்லை
அரிதரிதுதங்கத்தை யறியாவிட்டால்
வார்ந்துமேகெந்தியில்லாச் செந்தூரந்தான்
வடிவுமிகயாகாது வலுச்செய்யாது
மரந்துநீபாயில்லாக் கப்பல்போலே
மயமாகவோடாது மார்க்கமாமே. 137

மார்க்கமாம்யோகமுத்தர் வாக்கியத்தால்
வடிவாகவாதங்கள் வருகும்பாரு
தீர்க்கமில்லாப்படுபாவி தனக்குத்தானுந்
திடமாகவொன்றுமில்லை திட்டம்பாரு
ஏர்க்கவேசுடுவாதி தனக்குமில்லை
இதமானபண்டிதமு மில்லைகண்டாய்
கார்க்கவேகைபாகந் தனையுங்கண்டோர்க்
கருணையுள்ள புத்தியுள்ளோர்க்காண்பார்பாரே. 138

நாகக்கட்டு.

கருதியேநாகமது கட்டக்கேளு
கனிவாகநாகமது பலமுமெட்டு
நருதியேநாகமது சத்திகேளு
நலமாகயிலுப்பெண்ணை தனிலுருக்கி

வருதியேயேழுதிரஞ் சாய்த்துப்பின்பு
வடிவாகச்சுத்தியாம் வர்ணமெத்த
பருதியேதானுருக்கி வட்டாய்சாய்த்து
வடிவாகப்புகைநீரை யொன்றுமேகேளே. 139

புகைநீர்.

கேளுமேவெடியுப்பு பலமும்பத்து
கெடியானசீனமது யிருபத்தஞ்சி
வாளுமேரெண்டுமொன்று யிடித்துப்பின்பு
வடிவாகவாலையென்ற சட்டியிட்டு
நாளுமேதீயெரிக்க வெள்ளைநீராம்
நலமாகவெள்ளையைத்தான் தள்ளிப்போடு
காணுமேமஞ்சளைத்தான் பிடித்துக்கொண்டு
நலமானசீசாவி லடைத்துக்கொள்ளே. 140

வெடியுப்புச்சுன்னம்.

அடைத்துமேபின்பதுவும் வொன்றுக்கேளு
அடவாக வெடியுப்புசுன்னங்கேளு
நடைத்துமே வெடியுப்புப்பலமும்பத்து
நலமாகப்பழம்புளியும் பலமுமைந்து
படைத்துமேரெண்டுமொன்று யிடித்துக்கொண்டு
பதிவாகப்புதுச்சட்டி தன்னிலிட்டு
முடைத்துமேதீயெரிக்கச் சுன்னமாகுங்
முணர்வாகச்சுன்னமது பலமுமொன்றே. 141

ஒன்றுகநிறுத்துமே புகைநீர்தன்னில்
யுருதியாய்பொட்டிடவே புகைந்துபத்தும்
நன்றுகப்பத்தினதோர் புகைநீர்தன்னில்
நலமாகச்சிவந்து சிலமாகும்பாரு
கண்டாதயிச்சிலத்தில் வீரம்போட்டு
கனிவாகப்பார்த்திடவே காரம்ரொம்ப
நன்றுகப்பிங்காணி லிறுத்துக்கொண்டு
நலமாகமுன்னுகந் தன்னில்தானே. 142

தானென்றநாகத்தை யுருக்கிச்சாய்க்க
தாஷ்டிகமாய்ப்புகையடக்கிக் கட்டிப்போக்கும்
வானென்றநாகத்தை வில்லைவார்த்து
வடிவாகவதின்மேலே கவசங்கேளு
கோனென்றவளகிலுப்பை யரைத்துக்கட்டி
குணமாகக்காயவைத்துப் பின்புகேளு
நானென்றமண்சீலை வலுவாய்ச்செய்து
நாடியேபெரியபுடம்போட்டிடாயே. 143

போட்டுநீயெடுத்துப்பார் தங்கம்போலே
பொலிவாகக்கண்ணடங்கி நிற்கும்பாரு
காட்டுமேநல்லகட்டு முழுக்கட்டப்பா
நாடியேகட்டெல்லா முப்பினாலே
நாட்டுமே உப்பைவிட்டால் வர்ணம்போச்சி
நலமாகவுப்பை முந்திக்கட்டிப்பாரு
மூட்டுமே உப்பில்லாக்கட்டுயெல்லாம்
முதலாகப்பார்த்திடவே சித்தியாமே. 144

நாகக்களங்குவேதை.

சித்தியாம்நாகத்தை யுருக்கிக்கொண்டு
சிறப்பாகத்தங்கமது யிடையேசேர்த்து
புத்தியாயுருக்கியே தகடுதட்டி
போக்கோடோயிரதமது யிடையேசேர்த்து
நத்தியேயரைத்திடவே சூதந்தானும்
நலமாக மயினம்போலாகும்பாரு
பத்தியாயிருசாம மாட்டிப்பின்பு
பதிவாகக்காயவைத்துப் பின்புகேளே. 145

கேளுநீகிடத்திலிட்டு மேலேமூடி
கெட்டியாகச்சீலைமண் வலுக்கச்செய்து
ஆளுநீவாலையென்ற வடுப்பிலிட்டு
யடவாகயிருசாம மெரித்துப்பாரு
நாளுமேசெந்தூர முருக்கம்பூப்போல்
நலமாகயிருந்துவிடுஞ் செந்தூரந்தான்
பாளுமேபோகாது செந்தூரந்தான்
பதிவாகவலோகந் நூற்றுக்கொன்றே. 146

ஒன்றாகநூற்றுக்கு யொன்றுதானே
போக்கோடேவிட்டிடவே மாத்துப்பத்து
ஙன்றாக உப்புடனேயிரங்கிப்போகும்
நாட்டிலேசெந்தூரங் கிட்டாதப்பா
வன்றாகச்செந்தூரங் குன்றியுண்ண
வடிவாகவாத மெண்பதுதானப்பா
கன்றாகப்பித்தமது யெல்லாம்போகும்
கனிவாகச்சித்திதருங் கணக்குமாமே. 147

நாகச்செந்தூரத்தால் தீரும்வியாதி.

ஆமேதான்மகோதரமும் மாலைபோகும்
படைவானகாயமது காத்தானுகும்
நாமேதான்பவுத்திரங்க ளண்டவாதம்
நலமாகவிரைவாத மெல்லாம்போகும்
பாமேதான்குடல்வாதம் நீர்கள்போகும்
பதிவாகப்பயித்தியமு மயக்கம்போகும்
தாமேதான்பவித்திரங்கள் காமாலைபோகும்
சாக்ஷியாயிவையெல்லாஞ் சித்தியாமே. 148

சித்தியாங்காமாலை பித்தவெட்டை
கெடியாச்சூலை பதினெட்டும்போகும்
புத்தியாய்ப் பொல்லாதநோய்களெல்லாம்
புகலறியபண்புரைகள் லிங்கப்புத்தும்
நத்தியேமதுமேகம் ஆம்பல்கட்டி
நலமானநீர்க்கட்டு நாடாதோடும்
சத்தியமாய்ச்சொல்லிவிட்டேன் கைபாகத்தை
தாஷ்டிகமாய்ப்பார்த்திடவே தருணமாமே. 149

தருணமாம்ரசவாதம் யோகவாதம்
தாஷ்டிகமாய்ப்பார்த்தறிந்தால் தண்மையாகும்
வருணமாம்நூலறிந்தால் வாதமாச்சு
வடிவாகயறியாட்டால் வாதம்போச்சு
கருணமாய்ஞானமெல்லா மேதாலாச்சு
கருத்தறிந்தபெரியோரைக் கண்டுபாரு
வருணமாய்நம்பியே பார்த்தாயானால்
வடிவாகுஞ்சித்திதரும் வண்மைதானே. 150

நீலகண்ட செந்தூரம்.

தானென்றநீலகண்ட செந்தூரத்தை
தாஷ்டிகமாய்ச்சொல்லுகிறேன் யியக்கமாக
வானென்றநவலோக மெல்லாம்யேமம்
வடிவாகயறிந்தவனே சித்தயோகி
நானென்றயாணவத்தை விட்டோன்வாதி
நலமாகநூலறிந்தோன் நல்லசித்தன்
கோனென்றகுருவறிந்தோன் ஞானியாவான்
குணமாசயறியாதான் குணமில்லானே. 151

குணமாகநீலகண்ட வாலைதன்னைக்
கொடிதாகச்சொல்லுகிறேன் கூர்ந்துகேளு
பண்பாகக்கைபாக வரிசைகேளு
பார்த்தறியச்சொல்லுகிறேன் பாரின்மீது
இனமாகவுப்பாலே யெல்லாமாச்சு
ஓகோகோவுப்பைவிட்டார் லுத்தமாண்பர்
கனமாகமுப்பூவா மிந்தப்போக்குக்
காதலாயறிந்தவனே வாதியென்னே. 152

திருவகம்.

வாதியாஞ்சொல்லுகிறே யுற்றுக்கேளு
வடிவானவெடியுப்பு அஞ்சாங்காச்சல்
நீதியாம்பலம்பத்து நிறுத்துக்கொண்டு
நேரானசீனமது யிருபத்தஞ்சி
கோதியாம்ரெண்டுமொன்று பிடித்துக்கொண்டு
குணமாகவாலையென்ற சட்டியிலிட்டு
நீதியாயெரித்திடவே வெள்ளைநீரை
நேராகத்தள்ளியே பின்னீர்வாங்கே. 153

ரசபற்பம்.

வாங்கியேமஞ்சள்நிறம் வருகுமக்காள்
வடிவானமஞ்சளென்ற நீருதன்னை
தாங்கியேபிடித்துநீ வைத்துக்கொண்டு
தாஷ்டிகமாய்வாலைரசந் சேருவொன்று

பாங்கியேகல்வத்தி லிட்டுநீயும்
பதிவாகப்புகைநீரை யதிலேவாரு
தூங்கியேதிரியாதே ரவியில்வைத்தால்
துப்புறவாய்ப்பூத்திருக்குஞ் நேர்மைதானே. (154)

தானென்றபூவெடுத்து வைத்துக்கொண்டு
தாஷ்டிகமாய்சூதத்தில் புகைநீர்சூத்தி
வானென்றுவைத்திடவே பூத்திருக்கும்
வடிவாகயிப்படிக்கி யெல்லாப்பூவை
கானென்றுயெடுத்துடனே வைத்துக்கொண்டு
கனிவாகப்பாகமாய்க் கண்டுபாரு
தேனென்றசிவகாமி சொல்லக்கேட்டுத்
திடமாகமுப்பூவைச் சொல்வேன்பாரே. (155)

துருசுநீறு.

பாருநீதுருசதுவுஞ் சேர்தாஙொன்று
பதிவாகவதைப்பொடித்துச் சட்டியிலிட்டு
காருமேதீயெரிக்கச் சாமம்நாலு
கனிவாகக் கொக்குநிறம்போலேயாகுஞ்
சாறுமேயதையெடுத்துத் தூரவைத்துச்
சரியாகயறப்பொடிதான் சேர்தாஙொன்று
வாருமே கல்வத்திலிட்டுக்கேளு
வடிவானவீரமது பாதிசேரே. (156)

சேர்த்துநீபுகைநீரால் நெகிழவாட்டிச்
செம்மையுடன் வில்லேதட்டிகாயப்போட்டு
பார்த்துநீயகலிலிட்டுப் புடத்தைப்போடு
பதிவாகத்தீயாற்றி யெடுத்துப்பாரு
வாத்துநீசிவந்திருக்கும் முருக்கம்பூப்போல்
வடிவாகப்பலம்நாலு நிறுத்துக்கொண்டு
சாத்துவென் பூத்திருக்குஞ் சூதந்தானுஞ்
சரியாகச்சேர்த்துநீ துருசுநீறே. (157)

நீறாகமூன்றுமொன்று யிடையேசேர்த்து
நேராகப்புகைநீரை விட்டுயாட்டி
ஆறாகயரைத்துப்பார் சிவந்துநிற்கும்
அடைவாகப்பசுக்காது முருக்கம்பூவாம்
காரமாயிருசாம மரைத்துநன்றாய்
கனிவாகவில்லைதட்டிக் காயப்போடு
நாறாகக்காய்ந்தபின்பு கிடத்திலிட்டு
நலமாகமேல்மூடிச் சீலைசெய்யே. (158)

சீலைசெய்துகாயவைத்துச் சொல்லக்கேளு
செயமாகச்சட்டிதான் பெரிசாய்வாங்கி
ஆலையாம்நடுவிலே பொதிந்துதானே
அடவாகக்கிடமதுவை யிட்டுவுள்ளே
வாலையாயுள்ளேதான் மணலையிட்டு
வடிவாகத்தீயெரிப்பாய்ச் சாமம்பத்து
காலையாயரியிட்டுப் பிரித்துப்பார்த்தால்
கண்கொள்ளாச் செந்தூரமாகுந்தானே. (159)

தானாகக்கொஞ்சமது வுயரயேறி
தனியாகயிருந்திடுமே சார்ந்துபாரு
வானாகவதைவழித்து அடியில்நிற்கும்
வடிவான்செந்தூரந் தனைச்சேர்த்து
நானாகப்புகைநீரை விட்டுயாட்டி
நலமாகமுன்போலே வில்லைதட்டி
தேனாகரவிதனிலே காயவைத்து
திடமாகமுன்போலே கிடத்திலிட்டே. (160)

இட்டுமேதீயெரிப்பாய் பத்துசாமம்
இதமாகவாறியபின் னெடுத்திடாய்நீ
கட்டுநீபார்த்தாலே கனங்கொள்ளாது
கனிவானசெந்தூர முருக்கம்பூவாம்
பட்டுநீகைபாக மிந்தப்போக்கு
பதிவாகவிதியாளிக் கெய்துமப்பா
நட்டிநீவைத்தாலே யிந்தப்போக்கு
நலமாகவிளையுமது நாடிப்பாரே. (161)

நாடியேவயிரவர்க்குப் பூசைசெய்து
கலமாகச்செந்தூரந் தனையெடுத்து
கூடியேகும்பிதனில் தைலச்செம்பு
கூறினேன்முன் னூற்றுக் கொன்றுதாக்கு
வாடியேமாத்தென்ன பத்துமாகும்
வடிவான மகாகுண்டலங்கள்பண்ணி
தேடியேயிதைக்காணப் போற்றுமாண்பர்
செகத்திலேகிடையாது செந்தூரந்தானே. (162)

நீலகண்ட செந்தூரவேதை.

தானென்றசெந்தூரம் சவலோகத்தில்
தாஷ்டிகமாய்பார்த்திடவே மாத்துப்பத்து
வானென்றசாஸ்திரத்தில் நாதாக்கள்சொன்ன
மறைப்பெல்லாம்பாடிவிட்டே னுலகுதன்னில்
நானென்றவாணத்தால் செந்தூரத்தை
நாடியேசொல்லிவிட்டேன் நல்லவாக்கஃம்
கோனென்றகுருவருளைப் போற்றிதானே
குணமானசித்திதருங் கூர்ந்துபாரே. (163)

நீலகண்டசெந்தூரந் தீரும் வியாதி.

பாருநீ அந்திசந்திவெல்லந்தன்னில்
பண்பாகவுண்டிடவே மண்டலத்தில்
காருநீநரை திரையாக எற்றுப்போகுங்
கனிவானபித்தமறுங் கண்டுபாரு
சேருநீவாதமது யெண்பத்துநாலுஞ்
சிறப்பாகவோடிவிடுந் திறமைமெத்த
வாருநீபித்தத்தா லெடுத்தரோகம்
வடிவாகவோடிவிடும் வண்மைதானே. (164)

தானென்றசிலேற்பனங்கள் தொண்ணூத்தாறுந்
தாஷ்டிகமாயோடிவிடுந் தாக்கிப்பாரு
வானென்றமூலமுதல் கிருணியெல்லாம்
வடிவாகயோடிவிடும் வழக்கமப்பா

தேனென்றக்ஷயத்திலெழும் வியாதியெல்லாந்
திறமாகுங்குணமாகுஞ் சிறப்புமெத்த
நானென்றவிந்திறுகும் பசுமைமெத்த
நாடாதுயென்வசனம் பொய்ப்போகாதே. (165)

போகுமே பொல்லாதகர்மமெல்லாம்
புகழ்பெரியஞானமது மிகவுண்டாகும்
வாகாகப்பெரியோரைத் தொண்டுபண்ணி
வடிவாகயெல்லாமுஞ் சித்தியாகும்
ஆகாதகர்மமெல்லா மோடிப்போகும்
ஆச்சரியந்தேகமது காந்தியாகும்
தாகமாய்ச்செந்தூர முன்னேசெய்து
தயவாகவுண்டுநீ தாக்கிப்பாரே. (166)

பாருநீசித்தரெல்லாங் கூட்டங்கூடி
பதிவாகவழலையென்றும் பூநீரென்றுந்
தாருநீசவுக்காரச் சுண்ணமென்றுந்
தடைபடவே முப்பூவைமறைத்தாரப்பா
சாருநீமறைப்பையெல்லா முன்னூர்தன்னில்
சாக்ஷியாய்ச் செந்தூரவடிவுசொன்னேன்
தாருநீயிந்நூலை யாராய்ந்துபார்த்து
கருத்துறவேபார்த்தாக்கால் சித்தியாமே. (167)

சித்திபெறவேண்டுமென்றால் செந்தூரம்பண்ணு
செப்பரியசூதத்தைப் பூர்க்கப்பண்ணு
முத்தியாய் அயத்தைநீ செந்தூரித்து
முடிவாகசேர்த்தாக்கால் செந்தூரமாகும்
பத்தியாய்நவலோக மெட்டுக்கோடும்
பகலிரவாய்ஞானவழி யெடுத்துக்கூறு
நத்தியேதிரிந்துநீ சாஸ்திரத்தை
நலமாகப்பார்த்தாக்கால் சித்தனாமே. (168)

சித்தராயாவதற்கு முறைமைகேளு
சித்தத்திலேபுத்தியால் முப்புபாரு
நத்தியேமோக்ஷத்துக் கிடமேபாரு
நலமாகயெல்லாமுஞ் சித்தியாகும்

வித்திலேவிளைந்தாப்போல் ஞானமாகும்
வேதாந்தஞ்சித்தாந்தம் ரெண்டுமொன்று
சத்தியமாய்ச்சொல்லிவிட்டேன் செந்தூரத்தை
சரியாகவைத்துநீ சார்வுபாரே. (169)

உபரி பாண்டுச்சுன்னம்.

சார்வாக உபரிபாண்டுச்சுன்னங்கேளு
சமுசயங்களெண்ணுதே சார்ந்துபாரு
பார்வாகக்கடலினுரை சேர்தாரொன்று
பதிவாகச்சுத்திமுறை பண்புகேளு
வேறாகச்சொல்லுகிறேன் சுண்ணம்பாகும்
விதமாகவுவர்மண்ணைக் கரைத்துக்கொண்டு
சார்வாகத்தண்ணீரை விட்டுத்தானே
சமர்த்தாகக்கடல்நுரையைப் போட்டிடாயே. (170)

போட்டுநீகுமுறயெறி வொட்டக்காச்சிப்
புகழாகயதையலம்பிக் கல்வத்திலிட்டு
கூட்டியே கல்லுப்பு யிடையேசேர்த்து
குணமாகவரைத்துமே பொடியதாக்கி
மூட்டியேயடுப்பிலிட்டுத் தீயைமூட்டி
முனையாகநாயுருவிக் கொழுந்தினாலே
நாட்டிநீயிருசாமம் வறுத்தாயானால்
நலமாகச்சுன்னமது வாகும்பாரே. (171)

உபரிபாண்டு சுன்னசெயநீர்.

ஆகுமேகல்லுப்புச் சுன்னந்தானும்
அடைவாகக் கடுஞ்சுன்னமாகும்பாரு
வாருமேகல்லுப்புக் கொடியசுன்னம்
வடிவாகயிச்சுன்னங் காலன்காலன்
பாகுபெறச்சுன்னத்துக் கிதுவேயாதி
பதிவாகச்சுன்னமிடை சாரஞ்சேர்த்து
சாகுமேயிருசாம மரைத்தபின்பு
சாசுியாயடைபிடித்து வைத்திடாயே. (172)

வைத்துமேபுடம்போட்டு யெடுத்துப்பாரு
வடிவாகப்பனியில்வைக்க செயநீராகும்
கைத்துமேசெயநீரை யிறுத்துக்கொண்டு
கனிவாகபூரமொடு பச்சைரெண்டும்
பைத்துநீபலம்ரெண்டு நிறுத்துக்கொண்டு
பதிவாகச்செயநீரில் அரைத்துவில்லை
மைத்துமோரவியிலே காயப்போடு
மயமாக அஞ்சன்னக்குகையிலிட்டே. (173)

இட்டுநீமூடியே புடத்தைப்போடு
இதமாகயாறவிட்டுப் புடத்தைப்போடு
கட்டுமேகடுஞ்சுன்னம் பூரச்சுன்னம்
கனிவாகயிச்சுன்னங் காலர்க்கொக்கும்
பட்டுநீசாரத்தை யிடையேசேர்த்து
பதிவாகவைத்திடவே பனியில்தானும்
நட்டுமேபலபலெகூச் செயநீராகும்
நலமாகயிந்நீரில் வீரம்போடே. (174)

துரிசிச்சுன்னம்.

போட்டுமேபார்த்திடவே சிவந்துநீராம்
புகலவேயிந்நீரில் துரிசிதோய்த்து
நாட்டவேயெட்டுநாள் ரவியில்போடு
நலமாகக் கொக்கிறகுபோலேயாகும்
நாட்டுமேபத்தெருவில் புடத்தைப்போடு
வடிவாகக்கடுஞ்சுன்னந் துரிசிசுன்னம்
ஆட்டுமேயிதநாட்டு காலனுக்கொக்கும்
அரியப்பாசுன்னத்தின் போக்கைக்கேளே. (175)

சாறுவர.

போக்கானவிரலியிலே யிடித்துமேதான்
புகலறியசுன்னமது களஞ்சியிட்டு
வாக்காகப்பிசைந்திட்வே சாருதானும்
வந்துமேகொப்பளிக்குந் தண்ணீர்போலே

தாக்கானதண்ணீரை யிறுத்துக்கொண்டு
தாஷ்டிகமாய்லிங்கமது சேர்தானென்று
பாக்காகவோட்டிலிட்டு சுறுக்குதாக்கு
பதிவாகச்சாமமது சுருக்குப்போடே (176)

லிங்ககட்டுவேதை.

போடவேலிங்கமது யுருகிக்கட்டும்
பொன்போலே கரியில்நின்றுவாடும்பாரு
ஆடவேதங்கந்தா னிடைகொடுத்து
அடவாகரெண்டுமொன்று யுருக்கிக்கொண்டு
நாடவேசெம்புதனில் பத்துக்கொன்று
நாட்டினல்தங்கமது பத்துமாத்து
ஆடவேயிதைவைத்து ஜீவனத்தை
அடவாகச்செய்துநீ யடவுபாரே (177)

கெவுரிகட்டு அயக்களங்கு.

அடவாககெவுரியது பலந்தானென்று
அன்பாகக்கரண்டிதனி லிட்டுக்கொண்டு
திடமாகவிராளியிலேச் சாற்றினாலே
திறமாகயிருசாமஞ் சுறுக்குப்போடு
நடமாககெவுரிகட்டி மணியுமாகும்
நலமாக அரப்பொடிதான் பாதிசேர்த்து
விடமாகச்சேர்த்தரைத்து யுருக்கிப்போடு
வெகுசுறுக்காயுருகியது மணியுமாமே. (178)

ஆமேதான் அயம்நின்று வுருகும்போது
அடவாகநாலுக்கு ஒன்றுதங்கந்
தாமேதான்தங்கமிடை நாகம்போடு
சரியாகநாகமிடை லிங்கம்போடு
காமேதான்லிங்கமிடை வீரம்போடு
கனிவாகயுருகையிலே காரந்தாக்கு
வாமேதான் அயன்தானுங்களங்குமாகும்
வடிவானநவலோகம் நூற்றுக்கொன்று. (179)

ஒன்றாகயிட்டுநீ யுருக்கிப்பாரு
ஓமோகோமாத்துதான் பத்துமாகும்
நன்றாக ஆணிக்குப்பத்துமாகும்
நலமாகயிதைவைத்துச் சிலவுசெய்து
பண்டாக வாசியோகத்தைப்பாரு
பதைபதைத்துதிரியாதே நூலைப்பாரு
கன்றாக வுப்பினுடசுன்னம்பாரு
கருவானவாதமாங் கண்டுபாரே. (180)

கண்டுபாரிரும்புதனைக் கண்டபோதே
கனிவாகத்தங்கமது யிறங்கும்பாரு
உண்டுபார்யிக்களங்கைச் செந்தூரித்து
முறையாகவுண்டிடவே மோடிமெத்த
வண்டுபார் வடிவானகோபமுற்றால்
வாராதுயென்னபட்டும் வாதியோரே
நண்டுபார்யிக்களங்கைச் செந்தூரித்து
நலமாகவுண்டிடவே நாடிப்பாரே. (181)

பாருநீசாக்கைதான் கட்டியாடு
பதிவாகயெல்லாமும் பதங்கமாகும்
காருநீகொட்டினல் தேளையாகும்
கனிவாககொட்டாவிட்டால் பிள்ளைப்பூச்சி
சேருநீபெண்ணோடே சேரவேண்டாஞ்
சிறுவயதில்காளையொடு யிளைப்புண்டாகும்
தாருநீசகலமுந்தான் சித்தியில்லை
தாஷ்டிகமாயுப்பைமுந்தி கட்டியாடே. (182)

அயக்களங்கு செந்தூரம்.

ஆட்டியே களங்குசெந்தூரஞ்செய்ய
அடவாகச்சொல்லுகிறே னறிந்துப்பாரு
கூட்டியேயிரும்பான களங்குவொன்று
குணமானகெந்தகந்தா னென்றுகூட்டி

தேடியேபொற்றலையின் சாற்றாலாட்டி
திடமாகவில்லைதட்டிக் காயப்போடு
வாட்டியேயகலிவிட்டுச் சீலைசெய்து
வடிவாகப்பத்தெருவில் புடத்தைப்போடே. 183

போட்டுநீ தீயாற்றியெடுத்துப்பாரு
புகலறியசெந்தூர முருக்கம்பூப்போல்
நாட்டியேநவலோக மெட்டுமோடும்
நலமாகப்பலபிணிக ளோடிப்போகும்
வாட்டிநீமயங்காதே நல்லவித்தை
வடிவாகசெந்தூரம் அந்திசந்தி
காட்டுமேசெந்தூரங் குன்றியுண்ணு
கனிவாகவயிரம்போல் மேனியாமே. 184

ஆமேதான்செந்தூரம் பாலிலுண்ணு
அறிவழிந்துபோகாதே கைபாகத்தை
நாமேதான்பாகமாய்ப் பண்ணித்தேறு
நலமாகக்கேசரியை நாடியூது
வாமேதான்வூதிடவே வாசியோகம்
வண்மையாயுண்டாகும் நடத்தைப்பாரு
தாமேதான்சொல்லிவிட்டேன் முன்னூர்தன்னில்
தாஷ்டிகமாயெல்லாமுஞ் சித்தியாமே. 185

வெள்ளிவித்தை.

சித்தியாமின்னமொரு வெள்ளிமார்க்கம்
செப்புகிறேன் இதுவெகுவுமுன்னேபாரு
புத்தியாய்ப்பார்த்திடவே பாகமாகும்
போக்கோடேசொல்லுகிறேன் பூண்டுகேளு
நத்தியே வெள்ளைப்பாஷாணந்தானும்
நலமாகப்பலமொன்று நிறுத்துநீயும்
சத்தியமாய்நிலையறிந்து புத்தியாகச்
சரியாகக்கரண்டிதனில் வைத்திடாயே. 186

வைத்திடவே விராலியிலைச்சாற்றினாலே
வகையாகச்சுருக்குகொடு ஜாமம்நாலு
பைத்திடவேசுருக்கிட்டு ஆனபின்பு
பதிவாகவண்டோடு சுண்ணம்பண்ணு

கைத்திடவேயதின்மேலே யரைததுக்கட்டி
கனிவாகக்காயவைத்து ஆனபின்பு
புத்தியாய்க்காடையென்ற புடத்தைப்போடு
புகலரியயெல்லாமுஞ் சித்தியாமே. 187

ஆமேதான்கட்டிநின்ற பாஷாணத்தை
அடவாகவெள்ளிதனி லிடையேயீய்
நாமேதானுறுங்கியது தூளாய்நிற்கும்
நலமாக அந்தயிடைசூதஞ்சேர்த்து
வாமேதான்முன்நீரா லரைத்துமைபோல்
வடியாகவில்லைதட்டி காயப்போடு
சாமேதான்பத்தெருவில் புடத்தைப்போடு
சரியாகயெடுத்துப்பார் தவளமாமே. 188

தவளமாம்வெள்ளியம நூற்றுக்கொன்று
தாஷ்டீகமாய்கொடுத்துருக்கு வெள்ளியந்தான்
கவளமாய்வெள்ளிபது பத்துமாத்து
கனிவாகயிதைவைத்து சீவனத்தை
பவளமாய்செய்துகொண்டு ஞானம்பாரு
பாக்கியங்கள்மிகவாகும் பருதியுள்னே
தவளமாம்வாழ்வீர்கள் வெள்ளிவித்தைத்
தப்பாதநிச்சயமாந் தன்மைபாரே. 189

பாருநீமுன்னேதான் வெள்ளிவித்தை
பக்குவமாய்ச்செய்துநீ ஜீவனத்தை
காரேநீபண்ணியிடு ரூஜயோகம்
கனமாகச்செய்திடவே கருத்துநல்லாய்
வேறுநீயடிதொடுத்து யேறவேணும்
வேதாந்தநூல்களை விரைநதுபாரு
சாருநீச்லியாதே இனனம்பாரு
சாக்ஷியாயெல்லாமுஞ் சிததியாமே. 190

ஆமேதான்வாதமது எளிதிலாமோ
அடைவாகமுன்செய்த தவத்திலாகும்.
தாமேதான்சாஸ்த்திரத்தைப் பூண்டுபாருநீ
சரியாகச்செய்தாலே லாபமாகும்

வாமேதானறிவழிந்து போகாதேதான்
வடிவாகயென்னூலும் சித்திமெத்த
பாமேதான்விருந்திட்டுப் பகைகள்செய்தால்
பதிவாகயெல்லாமும் பகர்ந்துபாரே. 191

பகர்ந்துபார்வெள்ளிவித்தை செய்துக்கொண்டு
பதிபாசமாகவே செய்துப்பாரு
வகர்ந்துபார் வித்தைதானறியாமூடர்
வழக்கமாம்வேதமுக மறிந்துக்கொண்டு
தகர்ந்துபார்வேதமுகந் தெரியாவாதி
தாஷடிகமாயெல்லாமுஞ் சேர்ந்துகண்டு
உகர்ந்துபாரெல்லாமும் பாகமெல்லாம்
அடவாகச்சித்தியா மறிந்துபாரே. 192

## தாளக்குரு.

அறிந்துபார் இன்னமொருசேதிகேளு
ஆடலாமண்டரண்ட மணைத்துமோட
பிரித்துபார்தாளகமும் பலமுவாங்கிப்
பேசாதேசுத்திமுறை பேசக்கேளு
நரிந்துமேதாளகத்தை சுன்னாந்தன்னில்
நலமாகவைத்துமே சுத்திசெய்து
விரித்துநீவிராலியிலைச் சாற்றாலாட்டி
வடிவாகவில்லைசெய்து காயப்போடே. 193

போடவேகாயவைத்து அகலில்மூடி
போக்கோடேசொல்லுகிறோம் புடத்தைப்போடு
ஆடவேவெள்ளையாய்க் குருவுமாகும்
அன்பாகசெம்புதனில் நூற்றுக்கொன்று
நாடவேகொடுத்துப்பார் மாற்றெட்டேகால்
நலமாகயிருக்குமது வழியுமாகும்
கூடவேவழியறிந்து கூடவேணும்
குணமாகும்மனமாகும் குருவைக்காரே. 194

காருமே குருக்காணவேணுமென்றால்
கருவாகச்சாஸ்திரத்தை நம்பிப்பாரு
பாருமேசாஸ்திரத்தைப் பார்த்தால்சித்தி
பாராட்டால்பலனில்லைப் பாருபாரு

காருமேகம்பினால் வாதமாகும்
கருவரியாமாந்தருக்குங் காணுமோசொல்
சாருமேவழியறிந்து துறையறிந்துச்
சரியாகச்செய்தவனே சித்தன்தானே. 195

சித்தனாவதற்கு வழியைக்கேளு
சிவலிங்கத்தைக்கட்டியதோர் முறமையாலே
முத்தனாவதற்கு வழியுஞ்சொன்னேன்
மோகமுற்றவாதியென்று லொன்றமில்லை
சத்தியமாய்ஜெயநீரை வைத்துக்கொண்டு
சரியாகயெல்லாமுஞ் சூக்ஷணத்தில்கண்டு
போக்கோடே சகலசித்தியாகும்பாரே. 196

ஆகுமேமனக்குறங்கு செய்யொட்டாது
ஆதியாய்நின்றமே அலைவாரப்பா
வேகமாயலையாதே நாலைப்பாரு
வேதாந்தத்தாய்தன்னை நித்தம்பூசி
சாடுமேபெண்டீரைச் சேர்ந்திடாதே
சரியானதேகமது மிஞ்சிப்போகும்
கோருமேயிதையறிந்து வல்லோரெல்லாம்
குறிப்பறிந்துயிருந்தார்கள் குணமாய்த்தானே. 197

கெந்திநீரு.

குணமாகக்கெந்தகந்தான் பலமூம்நாலு
கூத்தாடும்பச்சிலையில் அரைசியிட்டு
பண்பாகயிலைச்சாரு பிழிந்துகொண்டு
பதிவாகக்கெந்தகத்தை ஜாமமாட்டி
உணவாகவில்லைதட்டி ரவியில்போடு
உற்றுமேகாய்ந்தபின்பு அகலிலிட்டு
வணக்கமாய்காயவைத்துநீ காடைபுடம்போடு
வழியாகக்கெந்தகந்தா னீறுமாமே. 188

ஆமேதான்கெந்தகத்தி னீறுதன்னால்
ஆடலாம்சவலோக மெட்டுமோடும்
தாமேதான்மாற்றென்ன பதினாறுகும்
காடியேலிக்கிரகங் குண்டலங்கள்

வாமேதான்பண்ணியே போட்டுக்கொண்டு
வடிவாக வாசியோகத்தைப்பாரு
தாமேதான்சுழிமுனையில் நாட்டம்பாரு
தாஷ்டிகமாய்ச்சகலசித்து மாகுந்தானே. 199

தானென்றதங்கம்விட்டால் வர்ணம்போச்சு
தாஷ்டிகமாய்கெந்திவிட்டால செந்தூரம்போச்சு
கோவென்றலிங்கம்விட்டால் வித்தைம்பாச்சு
கூட்டியேவங்கைவிட்டா லுயிருமம்பாச்சு
வாளென்றசாஸ்திரத்தை படியாமூடர்
வடிவாகச்சித்தியில்லை மாண்பர்மெதத
காளென்றகைபாகம் விட்டால்மேரு
கனமானவாதவித்தை யில்லைப்பாரே. 200

பாரேசீவுப்பைவிட்டால் வர்ணம்போச்சு
பதிவாகஞானம்விட்டால் வாதம்போச்சு
காருமே அயச்செம்பைமுன்னேவைத்து
கணிபாகும்வாதிகளே யெல்லாம்பாரு
சேருமே எனவிட்டாலெல்லாம்போச்சு
செம்மையாயிருந்தாலே அதீதமாச்சு
வாருமேயினத்திதாடே செய்துபாரு
வடிவாகயெல்லாமும் வண்மையாமே. 201

ஆமேதான்பொருளறியார் வாதங்காணார்
அடவாகவெள்ளிவித்தை மார்க்கந்தானும்
நாமேதான்சொல்லிவைத்தே னிந்தவித்தை
நாதாக்கள்சொல்லாத சொல்லைத்தானும்
பாமேதானிவ்வுலகில் ஞானயோகம்
பகலிரவாய்ப்பார்த்தவனே பரமயோகி
பூமேதான்வாதசித்தி யாகவென்றால்
புகலரியபின்றாலைப்பேணிப்பாரே. 202

பேணியேசொல்லுகிறே னின்னங்கேளு
பேசாதேயொருவருக்கும் புறஞ்சொல்லாதே
ஆணியாம்வயித்தியத்தில் வளைந்துபாரு
அடவானசித்தியெல்லாம் மிதற்குள்ளாச்சு

காணியாம்வல்லோர்கள் செய்வாரப்பா
காரணமாய்விதியதனைக் கண்டுகொண்டு
தோணிமேலேறினவன் போலேயாகுந்
துடியானவாதத்தின் செய்கைதானே. 203

நாகபற்பம்.

செய்கையாம்நாகபற்பச் செயலைக்கேளு
செயமாகபற்பத்தைச் செய்துபாரு
பைகையாம்நாகமது பலந்தான்பத்து
பதிவாகயிலுப்பெண்ணை தனிலுருக்கி
வைகையாம்வடிவாகக் கரண்டியிட்டு
வளமாகவுருக்கியே சோமனுதி
பைகையாமுகத்திலே தூவிப்பாரு
பதிவாகநீறியது சுன்னமாமே. 204

சுன்னமாம்நாகத்தில் வீரஞ்சேர்த்து
சுருக்காகயரைத்துநீ சொல்லக்கேளு
நன்மையாய்நால்ஜாமம் அரைத்துமைபோல்
நாடியேவில்லைதட்டிக் காயப்போடு
சொன்னபடிகாய்ந்தவுட னின்னங்கேளு
சூக்ஷமாய்க்கவசமது கட்டிப்பின்பு
கன்னல்போல்கவசமது கட்டிப்பின்புக்
கனமாகப்புடமிடவே கண்டுப்பாரே. 205

கண்டுபார்நாகமது பூத்தப்பூவை
கனிவாயப்பலம்நாலு நிறுத்துக்கொண்டு
பண்டுபார்பூத்தரச மிடையேசேர்த்து
பதிவாகப்புகைநீரா லரைத்துச்சாமம்
விண்டுபாரரைத்துமே வில்லைதட்டி
விதமாகக்காயவைத்துப் பின்புகேளு
மூண்டுபார்காயவைத்துக் கிடத்திவிட்டு
வேகமாய்மூடியதைச் சீலைசெய்யே. 206

நாகபற்பவேதை.

சீலைசெய்துகாயவைத்து அடுப்பிலேற்றி
செயமாகத்தீயெரிப்பாய் எட்டுசாமம்
வாலிசெய்துபெரித்திடுவாய் செந்தூரமாகும்
வடிவானசெந்தூரம் முருக்கம்பூப்போல்

காலைசெய்துயிருக்குமது பின்புநீயும்
கனிவாகசெம்புதனில் நூற்றுக்கொன்று
சாலையாமாத்தென்ன பன்னிரண்டு
சரியாகயெல்லாமுஞ் சித்தியாமே. 207

நாகபற்பம் தீரும்வியாதி.

ஆமேதாநாகத்தின் சுன்னந்தன்னை
படவாகச்சொல்லிவிட்டே னுலகுதன்னில்
வாமேதானந்திசந்தி வெல்லந்தன்னில்
வடிவாகமண்டலந்தா னுண்டாயானால்
காமேதான்வாதமது எண்பத்துநாலுங்
கனிவாகப்பித்தமது நாற்பத்தஞ்சுஞ்
சாமேதானோடிவிடுஞ் சிலேத்மரோகஞ்
சரியானமகோதாமுஞ் சாடிப்போமே. 208

சாடிப்போம்ரத்தபித்த பெரும்பாடெல்லாஞ்
சாதித்துயோடுமடா சலிப்போயில்லை
வாடிப்போம்வாந்திமுதல் ரோகமெல்லாம்
வடிவாகவோடுமடா சித்தியாகுங்
கூடிப்போம்ரோம்பல் வெட்டைபோகுங்
குணமாகும்யெல்லாமுங் கூர்ந்துபாரு
சூடிப்போஞ் சகலகலைகியானமெல்லாஞ்
சுகமாகும்யெல்லாமுஞ் சூக்ஷம்பாரே. 209

பாருமே ஆம்பலொடுதந்தவாயு
பதிவாகப்போகுமடா பண்புள்ளோர்க்கு
காருமேகவலோகம் ஏமமாகுங்
கனிவாகயேமத்தால் கெர்விக்காதே
நாருமேசெயலறிந்தால் பவுத்திரம்நீங்கும்
கலமாகும்பிலமாகும் நாட்டம்பாரு
சாருமேயிவையாலே யெல்லாமாச்சு
சாக்ஷியாய்க்கண்டவனே சித்தனாமே. 210

ஆமேதான்கண்டவர்கள் சொல்லுவாரோ
அலையாதேநாய்போலே யிருந்துபாரு
காமேதானலைந்தாலே யென்னலாபங்
கருத்துறவேபார்த்தாலே யுலகுதன்னில்

சாமேதானிம்மருந்தைப் பண்ணிக்கொண்டு
சரியாகப்பலபிணிகள் தனக்குத்தானும்
நாமேதான்குடுத்திட்டுப் பணத்தைவாங்கி
நலமாகவாதவித்தைப் பார்த்திடாயே. 211

பார்த்திடவேசூதத்தை முன்னேபாரு
பதிவாகயெல்லாமுஞ் சிணத்தில்சித்தி
எர்த்திடவேசூதமது வெளிதோவல்ல
இதமானகெவுனமது வெளிதிலாகும்
கார்த்திடவே நிழல்போலேகாத்திருந்தால்
கனிவாகுஞ்சகலசித்தி கருதிப்பாரு
நார்த்திடவேசெல்முனைக்கும் வாதம்போக்கு
நலமாகச்சித்திக்கும் நாடிப்பாரே. 212

நாடியேவயித்தியத்தைப் பொய்யென்றாக்கால்
நலமில்லாப்புழுப்போலே யழிந்துபோவான்
கூடியேபெண்புருடர் கூடிவாழ்ந்தால்
குணமாகச்சொல்லுவரோ உலகநீதி
பாடியதோர்பயனறிந்தால் வாதியாவன்
பதிவாகச்சொல்லிவிட்டே னறிவுள்ளோர்க்கு
வாடியேதிரியாதே நூலைப்பாரு
வடிவாகக் காரசாரத்தைப்பாரே. 213

பாருமேசகலகலைக் கியானமெல்லாம்
பண்பாகப்பார்த்துமே கருவையுன்னி
காருமேமுன் னூற்றில் சொல்லிப்போட்டேன்
சவனமாய்காயசித்தி யோகசித்தி
வாருமேவாதசித்தி யாகுமப்பா
வடிவானநூலெல்லாஞ் சித்தியாகும்
தீரமாயறிந்தவனே சித்தன்சித்தன்
திடமாகயெல்லாமுங் காரமாமே. 214

காந்தச் சத்து.

ஆமேதான்யின்னமொரு கருமானங்கேள்
அறிந்திடவேசொல்கிறேன் யன்பாய்கேளு
நாமேதான்காந்தமது பலமும்பத்து
நலமாகவுடைத்துமே கல்வத்திலிட்டு

சாமேதானிட்டுமே துரிசிகேளு
 சரியாகவெள்ளையாய் நீத்திப்போடு
பாமேதான்கெந்தியது முக்கால்போடு
 பருவமாய்வெண்காரஞ் சேருரெண்டே. 215

ரெண்டாகயிதுவெல்லாம் கெகிழவாட்டி
 நேராகவில்லைதட்டி காயப்போடு
பண்டாகவுப்புடனே சுன்னங்கூட்டி
 பதிவாகயிருசாம மரைத்துக்கொண்டு
நன்றாகக்கவசமிட்டுக் காயவைத்து
 நலமாகப்பத்தெருவில் புடத்தைப்போடு
வண்டதுபோல்கருப்பாகும் பின்புகேளு
 வடிவாகக்குகையிலிட்டு வுரிக்கிடாயே. 216

உருக்கியேகருவத்தி லிதனையிட்டு
 வுணர்வாகப்பாதியாய்க் காரமிட்டு
நெருக்கியேபழச்சாறு விட்டரைத்து
 நேமமாய்முன்போலே வில்லைதட்டி
அரிக்கியேயகலிலிட்டு புடத்தைப்போடு
 ஆடவாகக்குகையிலிட்டு வுருக்கித்தீரு
பெருக்கவேவெள்ளிபோல் கண்விட்டாடும்
 பிசகாமல்முன்போலே செய்திடாயே. 217

முன்போலேயரைத்துநீ புடத்தைப்போடு
 முறையாகயிப்படிக்கி மூன்றுபுடம்போடு
தன்போலேயுருகியல்லோ சத்துமாகுந்
 தாஷ்டிகமாய்சத்கெடுத்து கரியில்வைத்து
வன்போலேயுருக்கிடவே வெள்ளிபொன்போல்
 வடிவாகஆடிவிடுங் காந்தசத்து
அன்பாகக்காயசித்தி யுடனேயாகும்
 ஆடலாமொருகோடி வித்தைதானே. 218

வித்தையைமெழுகுகட்டி கிண்ணிவார்த்து
 விதமாகக்கிண்ணிக்குள் பாலைவிட்டு
நத்தியேயந்திசந்தி யுண்டாயானால்
 நமனுமேவந்தணுகான் பாலைபோலாஞ்

சித்தியாம்சரைதிரைக ளற்றுப்போகுஞ்
சிறப்பானவாதமெல்லாங் காந்தத்தாட்டு
புத்தியினல்கண்டவனே வாதியாவான்
புகலரியவாதியவன் கண்டுபாரே. 219

காந்தக்களங்கு.

பாருநீகாந்தசத்து வுருகும்போது
பரிவாகநாலுக்கு ஒன்றுதங்கஞ்
சாருநீதங்கமிடை நாகம்போடு
சலியாதேகளங்காகுஞ் செம்புதன்னில்
வாருமேநூற்றுக்கு ஒன்றுபோடு
வடிவாகச்செம்புதான் பழுத்தநேர்மை
கோருமேபத்தரையுங் காணுமாத்து
குணமாகக்குருவருளைக் கூர்ந்துபாரே. 220

காந்தச்செந்தூரம்.

பாருமேசெந்தூரஞ் செய்யக்கேளு
பதிவாகச்சத்ததுவும் பலமும்நாலு
சாருமேகெந்தியொன்று சேர்த்துக்கொண்டு
சமத்தாகப்பொற்றலையின் சாற்றாலாட்டி
கூருமேவில்லைதட்டி காயப்போடு
குணமாகக்காய்ந்தபின்பு மொழியக்கேளு
தாருமேயோட்டிலிட்டு வோடுமூடி
தயவாகப்பத்தெருவில் புடத்தைப்போடே. 221

போடவேதீயாற்றி யெடுத்துப்பாரு
போக்கோடேசெந்தூர முருக்கம்பூப்போல்
நாடவேயிருக்குமது செந்தூரந்தான்
நலமாகச்செந்தூரம் நூற்றுக்கொன்று
வாடவேகுடுத்திடவே மாத்துக்கேளு
வடிவாகயிருபத்தி யஞ்சுமாத்துக்
காடவேஆபரணம் விக்கிரத்தை
கனிவாகச்செய்திடவே சித்தியாமே. 222

ஆமேதான்செந்தூரங் குன்றியுண்ணு
அடவாகரோயெல்லாந் தவுடுபொடியாகுஞ்
சாமேதாநாள்பட்ட வியாதியெல்லாந்
தானுகவோடிவிடுஞ் சார்ந்துபாரு
வாமேதான்சிவனத்தை செய்துகொண்டு
மாகிமையாயிருந்தவனே யோகசித்தன்
தாமேதான்சொல்லிவிட்டேன் காந்தப்போக்கு
தப்பாமலெல்லாமுந் தன்மைபாரே. 223

பாருமேசெந்தூரத் தாலேயோகம்
பண்பாகச்சித்திக்கும் பரிந்துபாரு
காருமேசிவசொத்தை வறுமைபோ லுண்ணு
கனிவாகக்கும்மூயெழு நூறுதன்னில்
தாறுமேசொல்லிவிட்டேன் செந்தூரத்தை
நன்மையுடன்நீவைத்து வுண்டுதேறு
கூறுமேதனையறிந்தால் குணமுமாகுங்
குடுத்துறக்கமாத்ததுவும பததுமாமே. 224

கெந்தகச்செம்பு விபரம்.

ஆமோதான்கெந்தகத்தின் செம்புசொல்வேன்
ஆச்சரியம்வெகுலெகுவு முன்னேபாரு
நாமேதான்கெந்தியது பலமும்பத்து
நலமாகப்பசுவின்பால் படியுமொன்று
காமேதான்சட்டிதனி லிட்டுப்பாதி
கனிவாகமேலேதான் சீலைகட்டி
சாமேதான்கெந்தகத்தைப் பரப்பிமேலே
சரியாகமேல்சட்டி மூடிடாயே. 225

மூட்டியே அடிசட்டிப் புதைத்துப்போடு
முனையாகமேலேதான் புடத்தைப்போடு
கூடியேதீயாறி யெடுத்துப்பாரு
குணமாகமணிமணியா யிரங்கிபோகும்
வாடியேயிப்படியே அஞ்சிதிரம்போடு
வடிவாகப்பொன்நிறம்போல் நிற்கும்பாரு
சாடியேமணியெல்லா மெடுத்துக்கொண்டு
சரியாகச்சேர்க்குநிற தன்மைகேளே. 226

தண்மையாங்கெந்திக்கி யிடையேநீலன்
தாஷ்டிகமாய்ச்சேர்த்துநீ காரம்யாதி
உண்மையாய்சேர்த்துநீ பழச்சார்விட்டு
வுறுதியாயிருசாமங் தானரைத்து
வண்மையாயுண்டைபண்ணிக் காயவைத்து
யடிவாகஅதின்மேலே கவசங்கேளு
பண்மையாயுப்பிட்டுச் சுன்னமிட்டு
பரிவாகநன்றாய்நீ யரைத்துக்கொள்ளே. 227

அரைத்துநீயுண்டைக்கிக் கவசங்கட்டி
அடவாகவதின்மேலே மண்ணுந்தானும்
பரைத்துநீகவசமது கட்டிப்பின்பு
பண்பாகப்பத்தெருவில் புடத்தைப்போடு
நரைத்துமேயெடுத்துப்பார் கரியாம்நிற்கும்
நான்கண்டபடிசொன்னேன் நன்மைமெத்த
வரைத்துநீமயங்காதே குகையிலிட்டு
மாளவேயுருக்கிடவே சத்துமாமே. 228

சத்தாகுங்னெடுத்துப் பார்க்கும்போது
சரியாகவெள்ளிமணி போலேயாகும்
மூத்தானகுருவாகும் மேன்மைமெத்த
மூவுலகுக்கதிகமடா மூறைகண்டோற்கு
சித்தானசித்தியெல்லா மிதனாலாச்சு
சிறப்பானவாதமென்ன வசியமென்ன
நத்தியேபார்த்தாலே யெல்லாஞ்சித்தி
நாமறிந்தபடிசொன்னோம் நயந்துப்பாரே. 229

கெந்தகச்செம்பு காந்தசேர்மானம்

நயமாகச்சொல்லுகிறே மின்னங்கேளு
நாமுறைத்தபடிப்பாரு கைபாகத்தை
பயமாகக்கெந்தகத்தின் சத்துவொன்று
பதிவானகாந்தசத்து பலமுமொன்று
தயவாகாகரெண்டுமொன்று யுருக்கித்தீரு
தடையறவேயுருகியே சத்துமாகுங்
கயப்பானசத்துத்தான் கடியசத்தாங்
கனிவாகயெல்லாமுஞ் சித்திபாரே 230

பாருநீரெண்டுமொன்று யுருக்கிக்கொண்டு
பதிவாகச்செம்பாகும் பருவங்கேளு
நாருமேபுகைநீரை விட்டுஆட்டி
நலமாகவில்லைதட்டி காயப்போடு
சாருமேகாய்ந்தபின்பு அகலிலிட்டு
சார்வாகப்புடமொன்று போட்டுத்தீரு
காருமேபோட்டெடுத்து காரங்கூட்டிக்
கனிவாகயுருக்கிப்பார் செம்புதாமே. 231

கெந்தகச்செம்பு மகிமை.

செம்பாகுங்கெந்தகத்தின் செம்புமாகுஞ்
செப்பரியகெந்தகத்தின் செம்பினாலே
வம்பாகநடேசர்தான் வார்த்தசெம்பு
வடிவாகமுன்னூரில் வழுத்திப்போட்டேன்
நம்பானபெரியோர்கள் சொல்லுமார்க்கம்
நானறிந்தபடியாகுஞ் செம்பில்வேதை
பம்பரமாயாட்டிவைக்கும் வெள்ளிதனில்
பழுக்குமேநவலோகம் பழுத்தவாறே. 232

வாறுகேள்கெந்தகத்தின் செம்பினாலே
வடிவானநடராஜர் வந்துதித்தார்
தேறுகேள்நடேசரைத்தான் வார்க்கும்போது
திடமாகயில்லாத சேதிகேட்டு
கூறுகேள்சிற்பரைத்தான் கோபங்கொண்டு
கொடிதாகத்தானுரைத்தார் அரனைப்போ
பாருகேள்மூலர் வந்துதானும்
பாகமாய்வார்த்திட்டார் பரிசுதானே. 233

தானென்றகெந்தகத்தின் செம்புமார்க்கந்
தாஷடிகமாய்முன்னூற்றில் தன்மைசொன்னேன்
வானென்றஅதைமுடிக்கும் பாகஞ்சொன்னேன்
வடிவானகாயசித்தி யோகஞ்சொன்னேன்
கானென்றநூல்தனிலே யில்லையில்லை
கனிவாகயிந்தநூல் கைபாகத்தை
நானென்றஆணவத்தால் சொல்லிப்போட்டேன்
நாய்போலேயலையாதே நூலைப்பாரே. 234

## கெந்தகசெம்பு களங்கு.

பாருமேகெந்தகத்தின் செம்புதன்னை
பதிவாகச்செந்தூரம் பண்ணக்கேளு
நாருகேள்கெந்தியுட செம்புநாலு
நலமாகத்தங்கமொன்று நாகமொன்று
கூறுகேளிதையுருக்கக் களங்குமாகுங்
குணமாகநவலோகம் நூற்றுக்கொன்று
காருமேயிட்டிடவே மாத்துப்பத்து
கனிவாகவுப்புக்குங் காவிக்குந்தானே. 235

தாமென்றவுப்புக்குங் காவிக்கோடா
தனியாகப்புடத்துக்கு மிரங்கும்பாரு
வாமென்றவிதைவிற்று செலவுசெய்து
வடிவாகவுண்டுடுத்தி வழியத்தேடு
தேனென்றசிவகாமி சொல்லக்கேட்டு
சித்தாகப்புத்திதான் செழுமைகூர்ந்து
ஆணவத்தால்சொல்லிப் போட்டேன்
ஆதியென்றகெந்தியுட ஆண்மைதானே. 236

ஆண்மையாங்கெந்தகத்தின் செம்பினாலே
ஆடலாமொருகோடி வித்தையப்பா
தாண்மையாமுலகத்தோர செய்யமாட்டார்
தறுகுறும்பன்சொல்லுவான் மெய்யாவாறு
வாண்மையாஞ்சிவநிறைந்த யோகிக்கப்பா
வழியோடேகைபாக மருவிக்காணும்
ஏண்மையாய்ப்போகாமல் கெந்திமார்க்கம்
இயல்பாகச்செய்துநீ யிருந்திடாயே. 237

இருந்திட்டபஞ்சபூதத்தைச் சொன்னேன்
இயல்பானமுப்பூவி நிணக்கஞ்சொன்னேன்
கறந்திட்டபால்போலே கருத்துசொன்னேன்
காரணமாய்நல்விபரங் கருதிச்சொன்னேன்
நிறந்திட்டஆத்தாளைக் கேட்டுக்கேட்டு
நலமாகச்சொல்லிவிட்டேன் நல்லபாகங்
கறந்திட்டமாகவே யுலகின்வாழ்க்கைக்
காரணமாய்ச்சொல்லுகிறேன் கருத்துதானே. 238

தானென்றவுலகத்தில் வாதமோதான்
தாஷ்டிகமாயுட்கருவும்புறக் கருவுஞ்சொன்னேன்
ஊனென்றவுட்கருவை விட்டாயானால்
உலகத்தில்மானிடராய்ப் பிறப்பார்மட்டை
வானென்றஅவசரத்தில் செய்தாலப்பா
வடிவாகஒன்றுந்தான் சித்திக்காது
நானென்றஆணவத்தால் கெட்டோமென்று
நாய்போலேதிரிந்தலைந்து மாளுவாரே. 239

மாளாமலிருக்கவல்லோ செந்தூரஞ்சொன்னேன்
மயமாகச்செந்தூர மார்க்கந்தன்னை
தேளானபசியடங்கும் வாறுசொன்னேன்
க்ஷிணத்திலேஞானசித்தித் திறமாய்ச்சொன்னேன்
கேளானகுடும்பததில் நில்லாதென்று
கொடூரமாய்வந்திட்ட குணமுஞ்சொன்னேன்
பாழானவுடலைவிட்டு வுயிருபோன
பண்பானக்கதையாகும் பரிவதாமே. 240

ஆமேதாநின்னமொரு சேதிகேளு
ஆச்சரியங்கெந்தியுடச் செம்பைச்சொனனேன்
பாமேதாதுகொடுக்கும் பாகஞ்சொன்னேன்
பதிவாககளங்கு செந்தூரஞ்சொன்னேன்
தாமேதான்சுன்னமது மார்க்கஞ்சொன்னேன்
தயவாகவாதமது வலுக்கச்சொன்னேன்
காமேதான்சாவுக்கார் குருவைத்தானுங்
கண்டறிந்தபடிசொல்வேன் கருதிப்பாரே. 241

சவுக்காரம்.

கருதியேசித்திரை வைகாசிக்குள்ளே
கனலெழுந்துபூத்துநிற்கும் மண்ணைவாரி
நருதியேநாலாறு படியெடுத்து
கலமாகப்பாணிபடி ரெட்டிப்பூத்தி

வருதியேகலக்கியதை பின்புகேளு
வடிவாகக்கடல்நுரைச் சுன்னந்தானுங்
கருதியேபடிநாலு அளந்துவிட்டு
குணமாகக்கல்லுப்புப் படிதான்ரெண்டே. 242

ரெண்டாகத்தானளந்து பாண்டத்திலிட்டு
நேர்மையாய்கலக்கியே தெளிவிறுத்து
கண்டாகப்புதுச்சட்டி தன்னிலிட்டு
காரணமாஒட்டயெரி குழம்புபோலப்
பண்டாகஅகப்பையினு லெடுத்துத்தானே
பக்குவமாய்ச்சாம்பலால் பாத்திகட்டி
வண்டாகப்பாத்திதனில் துணியைப்போட்டு
வடிவாகவதின்மேலே குழம்பைவாரே. 243

வார்த்துநீமூடிவைக்கச் சாம்பல்தானும்
வடிவாகநீரிழுக்கும் வண்மையாக
காத்துநீமயங்காதே யின்னங்கேளு
கருவானவிளாங்காய் போலேயப்பா
சாத்துநீஉண்டைபண்ணிக் காயப்போடு
தாஷ்டிகமாயெண்ணை கக்கும் முறையைக்கேளு
ஏத்துமேவெடியுப்புச் செயநீர்தன்னை
யியம்புகிறேன்கைபாக வரிசைகேளே. 244

வெடியுப்புச்செயனீர்.

கேளுநீவெடியுப்பு பலமுமெட்டு
கெடியாகச்சீனமொன்று சாரமொன்று
ஆளுநீபுளியெட்டுக் கூடக்கூட்டி
யடவாகக்கல்லுரலில் போட்டுத்தானே
வாளுநீயிடித்துயதை நையத்தானே
வளமாகத்தீயெரிப்பாய் சுன்னமாச்சு
சாளுமேசுன்னத்தைப் பனியில்வைக்கச்
சரியாகப்பலபலெனச் செயநீராமே. 245

ஆமேதான்செயநீரி லுண்டைதன்னை
யடவாகத்தோய்த்திட்டு ரவியில்போடு
வாமேதான்சவுக்காரந் தானுமாச்சு
வடிவாகயெண்ணையெல்லாங் கக்கும்பாரு

காமேதான்வெண்ணையது கக்கிப்போனால்
நலமானவழலையென்ற சுன்னமாச்சு
காமேதான்பிச்சுன்னங் கொடியகாரங்
கனிவாகயச்சுன்னங் குகையில்தானே. 246

தானேதான் அச்சுகன்னக்குகையிலிட்டு
தாஷ்டிகமாய்மூடியே கோழியாக
நானேதான்புடமிட்டு யெடுத்துப்பார்த்தால்
நலமாகச்சவுக்கார சுன்னமாச்சு
வானேதான்சவுக்கார சுன்னந்தானும்
வடிவானவழலையென்ற சுன்னமாச்சு
கானென்றவாதமது எவல்கேழ்க்குங்
கனிவாகச்சிறுபிள்ளை யாடுந்தானே. 247

தானென்றசவுக்காரஞ் சொன்னபாகந்
தாஷ்டிகமாய்ச்சித்தரெல்லா மென்மேல்கோபம்
வானென்றசாஸ்திரத்தைப் பிடுங்கித்தானே
வடிவாகக்குகைதனிலே வைத்தாரப்பா
ஊனென்றவுதையெடுத்து வுலகத்தோர்க்கு
யுறுதியாய்க்கொடுத்துவிட்டே னின்னூல்தன்னில்
கானென்ற சவுக்காரத்தாலேமைந்தா
கனிவாகவங்கமது சுன்னமாமே. 248

வெள்ளீயச் சுன்னம்

ஆமேதான் வெள்ளீயகச்சன்னத்தாலே
யடவாகத்துரிசிபது சுன்னமாகும்
காமேதான்சவுக்காரம் பலமுமொன்று
கனிவாகக்கல்வத்தி லிட்டுதானுந்
தாமேதான்வாய்நீரா லரைத்துநன்றாய்
தளமாகவெள்ளீயந் தன்னில்கூட்டி
பாமேதானஞ்சுசுன்ன மேலேகாட்டி
பதிவாகக்காயவைத்துப் பின்புகேளே. 249

### சுருசிச் சுன்னம்.

பண்பாகப்பத்தெருவில் புடத்தைப்போடு
  பதிவாகப்புடமாறி யெடுத்துப்பார்த்தால்
நண்பாகவெள்ளீயஞ் சுன்னமாகும்
  நலமாகச்சுன்னத்தை யெடுத்துக்கல்வம்
வண்பாகயிட்டுநீகாலத்தொன்று
  வடிவாகவீரமது சேர்த்துக்கொண்டு
கண்பார்வையாகவே யுமினீர்விட்டு
  கனிவாகயரைத்துநீ துரிசிமேலே. 250

மேலாகக்கட்டியே காயப்போடு
  மேன்மையாய்பத்தெருவில் புடத்தைப்போடு
காலாகப்புடமாறி யெடுத்துப்பார்த்தால்
  கனிவாகத்துரிசியது சுன்னமாகும்
வாலாகத்துரிசியென்ற சுன்னத்தாலே
  வடிவாகச்சரக்கெல்லாங் கட்டிப்போகும்
பாலாகத்துரிசியென்ற சுன்னத்தாலும்
  பதிவாகக்களஞ்செடுத்து சொல்லக்கேளே. 251

### ரசக்கட்டு.

கேளுநீவிராலியிலைத் தண்ணீரிட்டால்
  கெடியாகச்சாருவரும் கண்டுகொள்ளு
வாளுமேயிட்டுநீ சூதந்தன்னை
  வடிவாகயிட்டுநீ பின்புகேளு
தாளுநீகரியோட்டில் குழறக்காச்சி
  தாஷ்டிகமாய்ப்பார்த்திடவே கட்டிப்போகும்
பாளுநீயுருட்டியே வைத்துக்கொண்டு
  பதிவாகயிறுகும்வகை பண்புகேளே. 252

### ரசக்குளிகை மகிமை.

பண்பாகக்கருவென்ற ஊமத்தங்காயில்
  பதிவாகவுள்வைத்துப் புடத்தைப்போடு
நண்பாகக்கடையென்ற புடத்தைப்போடு
  நலமாகயிப்படியே நூறுபுடம்போடு

தண்பாகப்புடம்போட்டு வெடுத்துப்பார்த்தால்
தவளம்போல்நிறமதுதான் வெள்ளையாகும்
வன்பாகக்குளிகைதனை வாயில்போட்டால்
வடிவானதேகமது மருவுந்தானே. 253

தானென்றகுளிகைதனை வைத்துக்கொண்டு
தாஷ்டிகமாய்கெவுனவெளி சுறக்கிலோடும்
வானென்றசொரூபமாங் குளிகையாகும்
வடிவாக ஆகாசந்தனிலெழும்பும்!
கானென்றவிந்துதான் கிழொடாது
கனிவாகப்பசுமாடு கறக்கும்போது
மானென்றமுதுகுதனில் வைத்திட்டாக்கால்
மயமாகப்பாலுதான் கறக்கவாறே. 254

வாறுகேள்கறக்காது மாடுதானும்
வடிவாகத்தேகமது கல்லாகுங்
கூறுகேளிப்படிக்கிக் குளிகைபண்ணி
குணமாக அஞ்சுமணிக்குளிகையாகுந்
தானுமேயிதைச்செய்து தாவடமாய்க்கோத்து
தாஷ்டிகமாய்க் கழுத்திலேபோட்டுக்கொள்ளு
பாறுமேயஞ்செழுத்து மெட்டெழுத்தும்
பதிவாகவோதிடவே பின்புகேளே. 255

கேளுநீ அஷ்டகர்மமாடலாகுங்
கெடியாகவிந்துதான் மிகவுண்டாகுந்
தாளுநீ ஆகாசகெவுனமோடும்
தாஷ்டிகமாய்ககெவுனசித்தி க்ஷணத்திலாகும்
வாளுநீமோடிதம் பணங்கள்செய்யும்
வடிவான ஆக்ருஷ்ணமிகவுண்டாகும்
காளுநீமகாவேக முண்டாமப்பா
கனிவாகச்சித்திதரும் கண்டுபாரே. 256

வாலைரச பதங்கம்.

கண்டுபாரின்னமொரு சேதிகேளு
கனிவானவைத்தியர்க்கு ஆதிபீடம்.
பண்டுபார்வாலைரச மெடுத்துக்கொண்டு
பதிவாகயிதைப் பதங்கஞ்சொல்வேனப்பா

குண்டுபார்வாலேரசம் பலமுமொன்று
குணமாகச்சிங்கியது பலமுமொன்று
தூண்டுமேரெண்டுமொன்றாய்ப் புகைநீர்விட்டு
துடியாகயிருசாம மரைத்திடாயே. 257

அரைத்துநீவில்லைதட்டி காயப்போடு
அடவாகச்சிறு சட்டிரெண்டெடுத்து
வரைத்துநீவாயதனை தேச்சுப்போடு
வடிவாகயுள்ளிட்டு நீமலேமூடி
யரைத்துமேசீலைமண் வலுக்கச்செய்து
யடவாகவுலையில்வைத்து ஊதுமெள்ள
பரைத்துமொன்றாக ஊதிப்பின்பு
பதிவாகச்சாமமது வொன்றுதானே. 258

தானேதானாற்றுக்கு மெல்லத்தானுந்
தடையறவேவகவசமதைப் பிரித்துப்பாரு
வானேதான்வாலேரச முயரமேறி
வடிவாகயிருத்துவிடும் வண்மையாக
கானேதானுயரத்தா னேறிநின்ற
கனிவானபதங்கமதை வழித்துக்கொண்டு
மானேநீவழித்தெடுத்த பதங்கம்வெள்ளை
மயமானபற்பத்தை யெடுத்துக்கொள்ளே. 259

எடுத்துமேசினத்தை யூதிகன்றாய்
இன்யமாய்ப்பதங்கமிடை சேர்த்துக்கொண்டு
அடுத்துமேவெண்கருவா லரைத்துக்கொண்டு
அடவாகவில்லைதட்டிக் காயவைத்து
கடுதுமேகிடத்திலிட்டு மேலுமூடி
கலமாகச்சீலைமண் வலுக்கச்செய்து
வடுத்துமேவாலையென்ற யடுப்பிலிட்டு
வழியாகச்சாமமது யெரித்திடாயே. 260

எரித்திடவேயடுப்பாற்றிப் பிரித்துப்பாரு
இதமாகயடியிலே நிற்குமப்பா
வரித்திடவே நெருப்புக்குயேகிடாது
வடிவாகநெருப்புதனில் போட்டுப்பாரு

கறுத்துமேயோடாது ஒளித்திடாது
கனிவாகச்செம்புதனில் பத்துக்கொன்று
பரித்துநீசெம்புதனில் குடுத்துபாரு
பதிவாகமாததென்ன எட்டுமாமே. 261

வாலைரச பதங்கந்தீரும் வியாதி.

ஆமேதானந்திசந்தி பணங்கால்வீதம்
அடவாகவுண்டுவரப் பிணிகள்போகும்
நாமேதான் வாதமெண்பத்துநாலும்
நலமானவண்டத்தின் வாதமோடு
தாமேதான்விரைவாதம் சூலைபோகுந்
தண்மையாய் முடக்கென்றசூலைபோகுந்
தாமேதான்பித்தமுதல் சிலேத்மம்போகுந்
தாஷ்டிகமாய்லிங்கத்தின் புத்துபோமே. 262

புத்துடனேயரையாப்பு கண்டமாலை
புகலறியபிணிகளெல்லா மாண்டுபோகும்
நித்துடனேபேணியது சொற்ணமாகும்
நிலத்துடனேகாயமது அழித்திடாது
வித்துடனேவித்தாகும விருப்பமெத்த
விதமாகமகோதரங்கள் முப்பத்திரண்டும்
நித்தியமாய்ப்போகுமது குஷ்டரோகம்
நிலையாகப்போகுமது கருங்குஷ்டந்தானே. 263

தானேதான்க்ஷய ரோகமேகம்போகுந்
தாஷ்டிகமாய்விந்திறுகும் வடிவாம்மேனி
வானென்றபச்சையென்ற நரம்புதானும்
வடிவாகயிறுகுமது வண்டுபோலாம்
கானென்றஜெலரோகம் லவணமேகங்
கருத்துடனேபோகமது கண்டுபாரு
நானென்றயானைவமு மிகவுண்டாகும்
நலமாகசகலகலை சித்தியாரே. 264

பாருநீபத்தியத்தை சொல்லக்கேளு
பரிவானவுப்போடு நல்லெண்ணையாகா
சாருநீயுண்ணுவது சொல்லக்கேளு
சாக்ஷியாய்ப்பாலோடு வன்னமாகுக்

தாருநீவன்னமது சம்பாகெல்லு
தாஷ்டிகமாயரிசியல்லால் வேறுமாகா
கூறுநீயன்னத்தைச் சமைத்துவுண்ணு
கூட்டோடேநோயெல்லா மோடிப்போமே. 265

போக்கோடேரசபற்பந் தன்னைக்கண்டால்
போகுமேவண்டறண்ட முரிகைப்போகும்
வாகுமேசகலநோயத் தீர்ந்துபோகும்
வடிவானயாட்டெல்லாஞ் சூதத்தாட்டு
தாகுபெறக்கட்டினால் பொன்னுமுண்டு
தாஷ்டிகமாயெல்லாமுஞ் சித்திமெத்த
ஏகுமேயென்னையாண்ட சித்தர்தாமும்
இதமாகச்சொல்லினா ரின்பமாமே. 266

இன்பமாம்வெடியுப்பு செயநீர்வைத்து
இதமாகவுண்டிடவே காயஞ்சித்தி
அன்பாகயெல்லாமுஞ் சித்தியாகும்
யடவானயோகசித்தி யாகுமப்பா
நண்பாகக்கற்றுணர்ந்த பெரியோருக்கு
நலமாகயெல்லாமுஞ் சித்தியாகும்
பன்பாகயெல்லாமுஞ் சித்திமெத்த
யளவாகயோகிக்கி யன்புமாமே. 267

கல்லுப்புக் கட்டு.

ஆமேதானின்னமொன்று சொல்லக்கேளு
யடவாகவுலகத்தில் வாதிக்கித்தான்
வாமேதான்கல்லுப்புக் கட்டுக்கேளு
வடிவாகச்சொல்லுகிறேன் வழக்கமாக
காமேதான்கல்லுப்பைக் கட்டிக்கொள்ளு
காட்டியேயெல்லாமுஞ் சித்தியாகும்
பாமேதான்சித்தியெல்லா மேதாலாச்சு
பதிவாகச்சித்திதரும் பண்புமாமே. 268

ஆமேதான் கல்லுப்புக்கரியிலாட
யடவாகச்சொல்லுகிறேனருமையாக
காமேதான்கடல்நுரையும் பலமுமொன்று
நலமாகக்கல்லுப்புப் பலமுமெட்டு

வாமேதான்ரெண்டுமொன்று யுருக்கிக்கொண்டு
வடிவாகவகையுடைத்து கலசத்திலிட்டு
தாமேதான்சுத்தகெங்கை தன்னைவிட்டு
தாஷ்டிகமாயொன்றுக்குப் படியைக்கேளே. 269

படிதானேயெட்டுவிட்டு பாகங்கேளு
பதிவாகயடிகனத்த சட்டியிட்டு
கொடியாகக்கொதிக்கவைத்து யிறக்கயுப்பாம்
கொடிக்குள்ளேகாச்சிநீயும் பாயக்காச்சி
குடியாகச்சிலைதனி லகப்பையாலே
குணமாகவிட்டுநீ யுண்டையாக
பிடியாகக்கட்டியே யுண்டையானால்
பிலக்கவேபண்ணியே காயப்போடே. 270

கல்லுப்பு வேதை.

போடவேயதின்மேலே கவசங்கேளு
பொருமியேகடல்நுரைதான் ஓட்டிசெட்டி
வாடவேமேல்கவசங் கூட்டிக்கொள்ளு
வடிவாகக்காயவைத்து வழக்கமாக
நாடவேயிதைவைத்து சீவனத்தை
நலமாகச்செய்துநீ பின்புகேளு
கூடவேசெம்புதா னுறக்கித்தானுங்
குணமாகக்குடுத்துப்பார் வொன்றுதானே. 271

குடுத்துமேபார்த்திடவே செம்புதானுங்
கொடிதானமாத்துத்தா னெட்டுமாகும்
விடுத்துமே உப்புக்கேகாவிக்கேகா
விதமானஞானசித்தி யோகமெய்தும்
தடுத்துமேயெல்லாமுஞ் சித்தியாகுந்
தனியானவடிவுள்ள யோகியாகுங்
கடுத்துமேயாதார வழியிற்சென்று
கனிவாகயெல்லாமுங் கனித்துபாரே. 272

பாருமேபதினெட்டு சித்தர்தாமும்
பாகமாய்கைபாகம் சொல்லிப்போட்டார்
பாருமேயிந்நூலில் சொல்லிவைத்தேன்
பரிவாகயிதைவைத்துக் கண்டுதேரு

பாருமேயாத்தாளைப் பூசைப்பண்ணி
பண்பாகவாதமதைச் செய்துதானும்
பாருமேமூன்னேதான் சிலவுசெய்து
பதிவாகயெல்லாமுஞ் சித்தியாமே. 273

கிருபேதிக் கட்ட.

சித்தியாமின்னமொன்று சொல்லக்கேளு
சிறப்பாகக்கட்டுவகை தன்னைக்கேளு
புத்தியாங்கிருணிவகை யெல்லாமுத்தான்
புகலாகப்போகவே சொல்லுவேன்பார்
நத்தியாங்கட்டுவகை சொல்லக்கேளு
நலமாகபயினியோடு கிரும்புதானும்
வித்திலேவிளைக்தெழுத்த பூரணத்தை
விதமாகயெல்லாமுஞ் சித்தியாமே. 274

ஆமேதான்பேதிதான் கட்டும்வாய்மை
யடவாகயந்திசந்தி கொள்வீராகில்
வாமேதான்கிருணியெல்லா மோடிப்போகும்
வடிவாகயெல்லாமுஞ் சித்தியாகும்
தாமேதான் சித்திதரவேணுமென்றால்
தாட்டிகமாயெல்லாமுஞ் சித்தியாகும்
பாமேதான்பாகமது யெல்லாமாச்சு
பதிவாகச்சித்திதரும் பண்புமாமே. 275

பண்புள்ளயெனையழைத்து பாகஞ்சொன்னூர்
பதிவாகக்கைமுறைதான் பார்த்துச்சொன்னேன்
நண்புள்ளோர்மனதுவைத்துப் பார்க்கக்கேளு
நலமாக்கைபாக மார்க்கந்தானும்
உண்பாகயெனையாண்ட அகத்தியமூர்த்தி
உறுதியாய்போகமது வுண்மைபாரு
தன்மையாமுனக்கேத்த புத்திசொன்னேன்
தாட்டிகமாயெல்லாமும் பண்புமாமே. 276

பண்பாகயுலகத்தில் மாண்பர்க்காகப்
பதிவாகவாதமுதல் வைத்தியஞ்சொன்னேன்
நண்பாகப்பண்டிதத்தைக் கண்டுபோத்தி
நலமாகயெல்லாமுஞ் சித்தியாகும்

வண்பாகவாதமெல்லா மும்பாலாச்சு
வளமாக உப்பைமுந்திகட்டிப்பாரு
தண்பாகயெல்லாமுஞ் சித்தியாகுந்
தாஷ்டிகமாய்நல்லபுத்தி நலமதாமே. 277

நலமாகவாதமொடு வைத்தியந்தானும்
நலமறியான்பண்டிதத்தின் பெருமைகாணார்
பிலமாகயெல்லாமஞ் சித்திமெத்த
பிசகாமல்வாதவித்தை பேணிப்பாரு
கனமானவாதிமக னறிவானப்பா
கருத்தழிந்துபோகாதே யுலகுதன்னில்
வலமாகயெல்லாமும் வந்துதோற்றும்
வடிவாகவயித்தியந்தான் சித்தியாமே. 278

சித்திரவேதென்றால் சொல்லக்கேளு
செகத்திலேவாழ்வதற்கு வாதமார்க்கம்
புத்தியாய்வாதமொடு வசியமாகும்
புகலாதேயெல்லாமு மனேகவித்தை
நத்தியேயவர்களுடன் வருத்துமாகும்
நலமாகயெல்லாமும் சித்தியாகுஞ்
சத்தியமாய்ப்பிழைக்கவே யுலகோர்காகச்
சாதகமாய்ச்சொல்லிவிட்டே னுலகில்தானே. 279

தானென்றயுலகத்தோர் கட்டுக்கெட்டு
தாஷ்டிகமாயஞ்செழுத்து மெட்டெழுத்தும்
வானென்றவுலகத்தோர் சிரிப்பாரப்பா
வடிவானகாயசித்தி யோகசித்தியாகும்
கானென்றவானுவத்தால் கெட்டோமென்று
நலமாகத்திரிந்தலைந்து மாளுவார்கள்
கானென்றதுருக்கிடையுங் கருக்கிடையும்வேணும்
கனிவாகப்பார்த்தறிந்தால் சித்தியாமே 280

யாமேதான்பார்த்தறிய வேணுமென்றால்
யடவாகவெல்லாமுஞ் சித்தியாகும்
காமேதான்சித்திதா னறிந்தபேர்கள்
கனிவாகவறிவார்கள் ளெல்லாந்தானும்
நாமேதான்சித்திபெற்று லெல்லாமாச்சு
நலமாகசித்திதரும் நட்புமாகும்
வாமேதான்சித்திக்க வேணுமென்றால்
வடிவானயோகமது மருவிப்பாரே. 281

மருவியேபின்னமொன்று வண்மைகேளு
வடிவானபெண்ணுடனே ஆணுஞ்சேர்ந்து
உருவியேவுருவதுவுந் தரித்தாப்போலே
உண்மையாயிதைவைத்து முன்னேசெய்து
கருவியேவுடல்குறிப்புக் கண்டுதேறு
நலமாகப்பொன்னாகுங் கண்டுதேறு
யுருதியாய்ச்செய்தாலே யெல்லாஞ்சித்தி
பொருவருடன்பேசாதே பண்மைபாரே. 282

தாளக பற்பம்.

பாருநீதாளகமும் பலமுமொன்று
பதிவாகக்கட்டியா யெடுதததுக்கொண்டு
தாருநீவிளையலுப்புப் பலமும்நாலு
தாஷ்டிகமாய்ப்பாணிவிட்டு அரைத்துநேராய்
ஊருமேதாளகத்தின் மேலேகட்டி
உற்றமேகரிதனிலே வாட்டுவாட்டு
சாருமேநன்றாகக் குமுறவாட்டு
சரியாக அனலெழும்பவாட்டிடாயே. 283

வாட்டியேதண்ணீரில் தூக்கிப்போடு
வடிவாகவுப்பெல்லாங் கரைந்துபோகும்
கூட்டியேயெடுத்துப்பார் சிவந்துநிற்குங்
குணமாகச்சிவந்திருந்த செந்தூரத்தை

நீட்டியேயதையெடுத்து வைத்துக்கொண்டு
நிலையாகயிஞ்சிநீர் வுவர்மண்நேராய்
மூட்டியேகலந்துநீ சட்டியிட்டு
மோகமாமாகுமினி சொல்லக்கேளே. 284

சொல்லவேதாளகச் செந்தூரங்கட்டி
செப்பவேவைத்துநீ மேலேதானும்
நல்லவேமூடியே யம்மிவைத்து
நலமாகமேலேநீ சட்டிமூடி
கல்லவேசிலைமண் வலுக்கச்செய்து
கனிவாகயடுப்புதனி லேத்திநன்றாய்
மல்லவேயிருசாம மெரித்துப்பாரு
மயமாகத்தள்ளியே யெடுத்திடாயே. 285

யெடுத்திட்டுவெய்யல்தனி லெட்டுநாள்தான்
யிதமாகவைத்திட்டுப் பார்க்கும்போது
யடுத்திட்டுவெள்ளையாய்ப் பூத்துறந்து
யடவாகப்பற்பமது வாகும்பாரு
வடுத்துமேபற்பத்தை யெடுத்துக்கொண்டு
வடிவாகவீரமதுக் கிடையேசேர்த்து
நடுத்துமேயிருசாமங் கல்வத்தாட்டி
நலமாகவில்லைபண்ணிக் காயவைய்யே. 286

காயவைத்துப்பின்புதான் சொல்லக்கேளு
கனிவாகக்கிடததிலிட்டு மேலேமூடி
மாயவேசிலைசெய்து யெரித்தாயானல்
மயமாகவில்லைதா னடியில்நின்று
நயவாகயேறுது யிருக்குமப்போ
நலமாகயிருந்திடவே நன்றாய்க்கேளு
சாயவேயந்திசந்தி தேனில்கொள்ளச்
சரியாகப்பத்தியத்தைத் தாக்கிடாயே. 287

## தாளகபற்பந் தீரும் வியாதி.

தாக்கிடவேயெலிகடிகள் போகும்பாரு
தாஷடிகமாய்வாய்வுகளும் போகும்பாரு
வாக்கிடவேருத்திரமாம் வாய்வும்போகும்
வடிவானமுசல்வலிப்பு மேகவாய்வு
பாக்கிடவேகாசமுதல் பறந்துபோகும்
பதிவாகயெல்லாமுஞ் சித்தியாகும்
யாக்கிடவே சோறுபாலுண்ணலாகும்
யடவாகயெல்லாமுஞ் சித்திகாணே. 288

காணவேமகோதரங்க ளெல்லாம்போகுங்
கனிவாகச்சித்திதருங் கருத்துள்ளோர்க்கு
ஊணவேவொருதருடன் பேசவேண்டாம்
உத்துமேமகோதாமு மோடிப்போகும்
நாணவேநாலான கண்டமாலை
நாட்டிலேயில்லாது நயந்துபாரு
வாணவேவல்லமையாந் தேகந்தானும்
வடிவானபொருளாகும் வண்மைபாரே. 289

பாருமேசாக்கைமுந்தி கட்டிப்பாரு
பதிவாகயுலகுதனில் பண்டிதங்கள்
காருமேமுன்னேதான் பார்த்துத்தேறு
கனிவாகரசபற்பம் லிங்கபற்பஞ்
சாருமேகைபாக மாகவைத்து
சரியாகவுண்டிடவே நோய்கள்போகும்
வாருமேகைபாக மாகச்செய்து
வடிவாகத்தின்றிடவே வண்மையாமே. 290

யாமேதானுலகத்தில் பண்டிதங்கள்
யடவானகைபாக மார்க்கத்தாலே
வாமேதானறிந்திடவே சித்திமெத்த
வடிவாகவறியாட்டால் சங்கமாண்டி

நாமேதானறிந்தவனே சித்தன்சித்தன
நலமாகவறியாட்டால் யோகியல்ல
சாமேதானறிந்தவனே புத்திமானுஞ்
சரியாகயின்னதென்று சாத்துறேனே. 291

சாத்துறேன்லோகத்து வாதிதானுஞ்
சரியாகவாதமொடு வசியந்தானும்
பாத்துமேபொய்பாடு மென்பார்லோகர்
பதிவாகவறிந்தவனே சித்தனாவான்
காத்துமேயிருந்தாலே யோகியோகி
கருணைபெரயறிந்தவனே கனகவான்பார்
நாத்துயேறிந்துகட்ட நாட்டம்போல
நாடியேயெல்லாமும் நாடிப்பாரே. 292

நாகரச செயனீர்.

நாடியேயின்னமொரு கருவைக்கேளு
நாதாக்களாட்டெல்லாஞ் சொல்லக்கேளு
மூடவேசொல்லுகிறே னுற்றுக்கேளு
மூவுலகுசித்தரெல்லா மேன்மையாக
வாட்டவேநாகமது செயனீராக
வடிவாகநாகமது பலமுமொன்று
கூடவேசூதமது பலமுமொன்று
குணமாகநாகமது யுருக்கிடாயே. 293

யுருக்கியேகறண்டிதனில் சூதத்துள்ளே
யுணர்வாகயிட்டல்லோ யெண்ணைக்குத்தி
நெருக்கியேயாறவிட்டு யெடுத்துப்பார்த்தால்
நலமாகப்புட்டாகுங் கல்வத்திட்டு
பெருக்கியேவீரமதை யிடையேயிட்டு
பேதமாவரைத்துநீ சாமம்நாலு
வருக்கியேநீராகுஞ் செயநீராகும்
வடிவாகுமின்னீரில் மார்க்கங்கேளே. 294

துரிசிச்செந்தூரம்

கேளுநீயிந்நீரிற் பூரமிட்டுக்
கெடியானபீங்கானி லிறுத்துக்கொண்டு
வாளுநீதுருசுதனைத் தோய்த்துத்தோய்த்து
வடிவாகப்போடவே யெட்டுநாள்தான்
மாளுமேதுரிசியது சிவந்துநிற்கும்
வடிவாகவதின்மேலே கவசங்கட்டுக்
காளுமேவண்டமது சுன்னம்பண்ணிக்
கனிவாகவரைத்துமே துரிசிமேலே. 295

மேலாகக்கட்டியே காயவைத்து
மெதுவாகக்காடையென்ற புடத்தில்வைத்து
காலாகவெடுத்துப்பார் செந்தூரமாகும்
கனமானவருணன்போ லாகுமப்பா
நாலாகசூதமது பலமும்நாலு
நலமாகத்திராவகத்தால் பூர்க்கவிட்டு
சாலாகத்துரிசு செந்தூரத்தோடே
சரியாகச்சேர்த்துநீ யரைத்திடாயே. 296

யரைத்துநீகவசமதை வுண்டைபண்ணி
யடைவாகக்காயவைத்து பின்புகேளு
பரைத்துமேகிடத்திலிட்டே யெரித்தாயானால்
பரிவானசெந்தூரமுருக்கம்பூப்போல்
கரைத்துநீவெள்ளிதான் மூன்றுமாகுங்
கனிவாகச்செந்தூரம் ரெண்டுமாகும்
முரைத்துநீயுருக்கிப்பார் தங்கமாகும்
முறையாகவெல்லாமுஞ் ஜெயமுமாமே. 297

ஆமேதான்தங்கத்தை வித்துத்தானே
அடைவாகச்சிலவுபண்ணிப் பசியைத்தீர்த்து
வாமேதானுண்டுடுத்தி வழியைத்தேடி
வடிவாகஞானவழி யடுத்துக்கூடு

சாமேதான்சுழிமுனையை யடுத்துத்தேடு
சரியானலோகமது கண்டால்சேரும்
பாமேதான்யெல்லாமுஞ் சித்தியாகும்
பதிவாகச்சகலசித்தும் பண்புமாமே. 298

ஆமேதான்மண்டலத்தி லந்திசந்தி
யடவாகவுண்டிடவே நோய்கள்போகும்
நாமேதான்வாதத்தின் றோகம்போகும்
நலமானபித்த சிலேத்மனங்கள்போகும்
வாமேதான்வாதசித்தி யுடனேயாகும்
வடிவாகக்காயமுதல் வண்மையாகும்
சாமேதான்சொன்னபடி யெல்லாந்தீருஞ்
சரியாகப்போகுமே தண்மைதானே. 299

தாளகநோயெல்லாந் தவுடுபொடியாகுந்
தாஷ்டிகமாய் நரைதிரைகளற்றுப்போகும்
வாளகவிதுலெகுவு முன்னேபாரு
வடிவாகச்சித்திதரும் வண்மைமெத்த
தாளகநோய்தீரும் மருந்துவைத்து
தாஷ்டிகமாயுண்டிடவே நோய்கள்போகும்
வேளனகுருவருளால் சொல்லிப்போட்டேன்
வேதாந்தசாஸ்திரத்தின் விபரந்தாமே. 300

தாமேதான்கும்மியை யெழுநூறும்பாடி
தயவாகவைந்நூறும் பாடினேன்பார்
வாமேதான்விளங்கவில்லை யென்றுசொல்லி
வடிவாகமுந்நூறை வகுத்தேனப்பா
சாமேதான்சாஸ்திரஞ் சூஸ்த்திரமும்பாரு
சரியாகப்பசகட்கு தோணுந்தாணும்
நாமேதான்உலகறியச் சொல்லிப்போட்டோம்
நண்மைதரும் முந்நூறுநயமாமுற்றே. 301

புலஸ்தியர் வாதசூத்திரம் - 300.

முற்றிற்று.

---

# புத்தக விளம்பரம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| கம்பராமாயண பாலகாண்ட பாட்டு உரை | 3 | 8 |
| பட்டினத்தார் பாடலுரை | 1 | 8 |
| தாயுமானசுவாமி பாட்டு உரை | 2 | 4 |
| விநாயகபுராண வசனம் இலோஸ்காலிகோ பைண்டு | 4 | 0 |
| தனிப்பாடற்றிரட்டு பாட்டு உரை | 2 | 8 |
| வேதாரணிய ஸ்தலப்புராண வசனம் | 0 | 8 |
| அறப்பளீசுரசதகம் உரை | 0 | 12 |
| குமரேச சதகம் உரை | 0 | 12 |
| மானங்காக்கும் ஞானதீபம் | 0 | 4 |
| மகமாயி அம்மன் பூசாரிப் பாடல் | 0 | 4 |
| நந்தனார் டிராமா | 0 | 2 |
| பாண்டியதாஸ் கீர்த்தனை | 0 | 5 |
| மலையாள மாந்திரீக ஹரிச்சுவடி | 0 | 4 |
| **கதை புத்தகங்கள்.** | | |
| விக்கிரமாதித்தன் கதை | 1 | 0 |
| 32—பதுமை கதை | 0 | 8 |
| அகட விகட கோர்ட்டு விசாரணை | 0 | 8 |
| ஸ்திரீ புருஷ ரகசியம் | 1 | 0 |
| ஆயிரத்தொருநாளில் சொல்லிய பாரிசுக்கதைகள் | 2 | 0 |
| கமலநாதன் | 1 | 8 |
| நாகபூஷணம் தமிழ் நாவல் | 0 | 12 |
| **வைத்திய புத்தகங்கள்.** | | |
| போகமுனிவர் சத்தகாண்டம்-7000 | 4 | 0 |
| வைத்தியரத்தினச்சுருக்கம் | 0 | 4 |
| புலஸ்திய மகாரிஷி வாத சூத்திரம்-300 | 0 | 12 |
| பரிபூரணம் 400 | 0 | 4 |
| அகஸ்தியமுனிவர் பூரண சூத்திரம் 216-பாடல் | 0 | 8 |
| தேரையர் வைத்தியம் 100 பாடல் | 0 | 4 |
| புலிப்பாணிவைத்தியம் 500பாடல் | 0 | 6 |
| பாலவாகடத்திரட்டு வைத்தியம் 1200 | 1 | 0 |
| ஊர்வசி வைத்திய சிட்கா | 0 | 8 |
| இரண்டாம் பாகம் | 0 | 8 |
| வைத்திய குறள் பழமொழி விளக்கம்-108 | 0 | 8 |
| **சோதிட புத்தகங்கள்.** | | |
| நவக்கிரக சிந்தாமணி என்னும் சாதக சூடாமணி மூலமும்-உரையும் | 0 | 12 |
| பீமகவி பாட்டு உரை | 1 | 0 |
| சுகர்நாடி சோதிடம் | 1 | 0 |
| சோதிமாமுனிவர் சோதிட கேரளம் | 0 | 12 |
| சோதிடமுகூர்த்த விதானம் | 0 | 12 |
| **டிராமா புத்தகங்கள்** | | |
| கோவிலன் சரித்திரம் | 0 | 4 |
| சாவித்திரி சரித்திரம் | 0 | 4 |
| நல்லதங்காள் சரித்திரம் | 0 | 4 |
| பவளக்கொடி சரித்திரம் | 0 | 4 |
| அல்லி சரித்திரம் | 0 | 4 |
| சதாரம் சரித்திரம் | 0 | 4 |
| கண்டிராஜன் சரித்திரம் | 0 | 4 |
| லங்காதகனம் | 0 | 4 |
| வள்ளியம்மை திருமணம் | 0 | 4 |
| இராமதாஸ் சரித்திரம் | 0 | 4 |
| மயிலிராவணன்சரித்திரம் | 0 | 4 |
| இந்துஸ்தான் பஜனைக்கீர்த் | 0 | 4 |
| லலிதாங்கி சரித்திரம் | 0 | 4 |
| குலேபகாவலி சரித்திரம் | 0 | 4 |
| ஞானசவுந்தரி சரித்திரம் | 0 | 4 |

ஆசான் அன்னியில் 60-நாளில் ஆர்மோனியம் வாசிக்கலாம்
ஆர்மோனிய ஆசான் சங்கீத களஞ்சியம் அணா—2

**இட்டா - பார்த்தசாரதி நாயுடு சன்ஸ்,**
189, தங்கசாலைத் தெரு, சென்னை.